" His Royal Highness desires me to express to Mr. Swaminatha Aiyar his best thanks. "—See Wrapper p. 3.

**REGISTERED—M. 108.**

VOL. XVIII.] **JULY 1910.** [No. 4.

லேசான காகிதப் பதிப்பு.
தனிப்பிரதி, 5½ அணா.
பழைய பிரதி, 6 அணா.

சந்தா விலை விபரம்.
ஒரு வருஷத்திற்கு ரூ. 4.
ஆறு மாதத்திற்கு ,, 2-2.




அறிவைப் பரவச் செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகை

*Devoted to practical Truth and Knowledge.*

அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா ரென்னுடைய ரேனு மிலர் :-திருக்குறள்.

A POPULAR NEW REVIEW AND TAMIL MONTHLY, ESTD. MAY, 1892.

கற்க கசடறக் கற்பவை கற்றபி னிற்க வதற்குத் தக : திருக்குறள்.

ILLUSTRATING THE PRINCIPLES OF EDUCATION, PSYCHOLOGY, SOUL - CULTURE & ETHICS.

*Adapted for Use in Homes & Schools.*

["Hitch Your Wagon to a Star"—Emerson.]

CONTENTS. Page.



அட்டவணை. பக்கம்.



["Our Theism is the Purification of the Human Mind"—Emerson.]

Thick Paper Edition for Patrons.] PUBLISHED BY [Minimum Subscription Rs. 5.

**The Secretary, Diffusion of Knowledge Agency,**

*Lalitalaya, Mylapore, Madras, S.*

*For The Viveka Chintamani publishing Committee.*

Thin Paper Edition for the People.] *(Copyright Registered)* [Subscription Price: Yearly Rs. 4.

*Like a spider, like the earth, and like a living creature He produces the Universe."—Sruti.*

# THE VIVEKA CHINTAMANI.

ESTABLISHED 1892.
The Oldest and the Best Tamil Monthly: Yearly Rs. 4.
Thick Paper Edition Rs. 5. in Advance.
Subscriptions registered by Volume only and cannot be discontinued in the middle of a Volume.

**EDITOR**
**C. V. Swaminatha Aiyar.**

LALITALAYA, MYLAPORE.
*Madras, S. July, 1910.*

---

# விவேகசிந்தாமணி.

வருஷசந்தா ரூ. 4, வால்யம் கணக்காகவே சந்தா பதிவுசெய்யப்படும்.

## விவேகசிந்தாமணிக் கமிட்டி விண்ணப்பம்.

ஆரிய சகோதரர்களே! விவேகசிந்தாமணி, இனி மாதந்தோறும் ஒழுங்காக வெளியாகி வரும். ஸாதாரண வருஷ முதல் மிகவும் அருமையான விஷயங்களெல்லாம் வெளிவரும். ஸித்தர்கள் ஸாதநமுறை, யோகம், பக்தி, ஞானம் முதலான ஸாதநமுறைகள் வெளியிடப்படும். விவேகசிந்தாமணி யென்ற பெயர்க்கேற்றபடி இதில் விவேகத்தை விளைக்கக்கூடிய அற்புத விஷயங்கள் நிறைந்திருக்கும். இக்காலத்துக்கேற்றபடி தேசாபிமானம், பாஷாஞானம், நீதிபோதம், வேதாந்தசாரம், சுதேச விதேச சரித்திரங்கள், மஹாத்மாக்களின் அமிருத வசனங்கள், பகவான் அர்ச்சுனனுக்குப் போதித்த நித்தியானுகூல ஸாதனங்கள், அப்போதப்போது நடக்கும் விசேஷ ஸம்பவங்கள், ஆகிய இவைகள் அடங்கப்பெற்றுச் செந்தமிழ் நடையில் எழுதப்பட்டுத் தமிழ்நாடெல்லாம் ஜ்வலித்துவரும். இம்மாதாந்தப் பத்திரிகைக்கு ஒவ்வொருவரும் சந்தாதாரராகச்சேர்வதுடன் தங்கள் நேசர்களுக்கும் காட்டி அவர்களையும் வாங்கும்படிசெய்து ஆதரித்துவரக்கோருகிறோம். மனிதர்களுக்கு உப்புவழிகாட்டி அவர்களைக் கடைத்தேறச் செய்யும் உண்மையான ஸத்குருவைப்போல விவேகசிந்தாமணியை வாசிப்பவர்களுக்கு அது உற்றவிடத்துதவியாய் நின்று விவேகத்தை வளர்க்கும் குருவாய்த்தோற்று மென்பதிற் சிறிதும் சந்தேகமில்லை. பத்திரிகையை முழுதும் படித்துக் கைமொப்பக் காரர்களாய்ச் சேரவும், இதரர்களையும் அப்படியே சேரும்படி செய்யவும் கேட்டுக்கொள்கிறோம். இப்பத்திரிகை சென்ற பதினேழு வருஷங்களாக இடையறாது நடைபெற்று வந்து, இடையே அச்சாபீஸார் செய்த தவறுதலால் இடர்ப்பட்டு சஞ்சிகைகள் தவக்கப்பட்டாலும், அதனால் குற்றமின்றி பத்திரிகை தொடர்பிடியாய் நடந்துவர ஏற்பாடாகி 17-வது வால்யம் 12-சஞ்சிகைகளும் சரிபாக முடிந்துவிட்டன.

### 1910ஹு ஏப்ரல் - மே முதல் 18-வது வால்யம் ஆரம்பம்.

சி. வி. ஸ்வாமிநா தய்யர்.
பத்திராசிரியர்.

எம். கே. நாராயணஸ்வாமி ஐயர், பி-ஏ., பி-எல்.
விவேகசிந்தாமணிக்கமிட்டி காரியதரிசி.

ஐயா,

## ORDER FORM.

Please enrol me as a Subscriber and send the Vivekachintamani by V. P. P. for a year's subscription, viz Rs. 4-1-0.

ஐயா, விவேகசிந்தாமணிக்கு என்னையும் ஒரு சந்தாதாரராகச் சேர்த்துக்கொண்டு முதல் சஞ்சிகையை ஒரு வருஷ சந்தா ரூபா 4-1-க்கு V. P. P. மூலமாக அனுப்பக் கோருகிறேன். தவறாமல் தபாலாபீஸில் பணம் கட்டிப் பெற்றுக்கொள்கிறேன்.

பேர் ____________________

தொழில் ____________________

ஊர் விலாசம் ____________________

போஸ்ட் ____________________

ஸ்ரீ தனிப்பிரதிக்கு ஒற்றைசஞ்சிகையானால் அணா 5½, இரட்டை சஞ்சிகையானால் அணா 10, அனுப்பவும்.

*Give me not O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith."*
*"Seek Truth wherever you can find it." But,*
*"Make your Choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**Speak the Truth.**

"HITCH YOUR WAGON TO A STAR". "TO THINE OWN SELF BE TRUE".



அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்சத்.] [God is Love. Knowledge is Power. *Aum*

ஸத்யமே ஜெயம்—**Satyameva Jayati.**

பு. **18.**] **1910**ஸ ஜூலைமீ, சாதாரணஸ ஆடிமீ [ச. **4.**

# *The Religious Feeling-Its Use and Abuse.*

Commenting upon the lack of religious feeling in India, the *Bengalee* writes:— "And can we hope to live to be a great nation when our religion has become a round of formulae and has ceased to be a vitalizing influence? Does not the thought naturally strike one that it would be idle for us to attempt to re-achieve our past greatness unless we can make a living thing of that spirituality that constituted the central factor of that greatness? We earnestly appeal to the thoughtful section of our countrymen, to the leaders of our society, to think over this question seriously, to address themselves to the task of spiritual reconstruction side by side with the efforts they have so long, so strenuously put forth in other useful directions."

"Much harm has been done to youngmen by the perversion of sacred writings for seditious purposes and the district officer should draw attention to the danger of attempting to graft politics on to religion."—*The Government of India* Circular Letter dated March 14, 1910.

"Special interest will be attached to a learned contribution on what he calls "*Spiritual Ventures*," by Mr. C. V. Swaminatha Aiyar, in the *Hindustan Review*. It will throw a flood of light upon the doings in Bengal and in certain other parts of India. It is explained that as the body, so the soul, has certain stages of development. There is a stage in the life of every man, unless that man has sunk to the lowest depths, in which he feels an elation of the mind, that rises above the narrow surroundings of the world. Sufficient attention is not paid to this development of the mind; and other thoughts and ambitions coming crowding in, this awakening of the Soul, as it is called, is not sufficiently nourished so that it might result in the good of the Individual. But it is not that it is insufficiently nourished, so as to build up a great and good man, that constitutes the chief complaint. It is that when the soul has awakened and is ready to receive impressions, wrong impressions are given by people who call themselves religious and pretend to lead the life of abstinence."—*The Indian Patriot of 16th June 1910.*

## ஆஸ்திக சித்தம்.

அதனால்விளையும் நுணழும் கேடும்.

"தெய்வம் என்பதோர் சித்தமுண்டாகி முனிவிலாததோர் பொருளது கருதலு மாறு கோடி மாயாசக்திகள் வேறுவேறுதம் மாயைகள் தொடங்கின"—என்கிறார் எம்பெருமான் ஸ்ரீமாணிக்கவாசகர். இது எல்லா விதத்திலும் உண்மையே! "தெய்வம் என்பதோர் சித்தம்" உண்டானால்தான் மாயையின் கூத்துக் கிளம்புகிறது. மாயையின்கூத்தே மனக் கிளர்ச்சியை யுண்டுபண்ணுகிறது. மனக்கிளர்ச்சி யென்றாலும் உற்சாகம் என்றாலும் ஒன்றே. இளங்குழந்தை விரகதாப மறியுமா? அறியாது. அதுபோல மூடம் நிறைந்த அறிவு (மூடாத்மா) மனக்கிளர்ச்சியை யுணராது. அது தேஹோஹ பாவனையில் திடபட்டுத் தேஹமே சதமென வுழலுமாதலால் உலகப்பற்றுவிடாது அதில் சிக்கி ஆடிவரும். தேஹப்பற் றுண்டானால் உலகப்பற்று தானேவரும். அவை யிரண்டும் வியஷ்டி, சமஷ்டி ரூபங்ககளாம். இப்படிப்பட்ட மூடாத்மாக்களுக்கும் உலகானுபவம் முதிர்ந்த காலத்தில் இஹத்தில் சுகமில்லை யென்று தேறி, இவ்வுலகில் காணக்கிடைக்காத சுகத்தைத் தேடி யலையும்போதும், தேஹம் அலுத்துச்சலுத்துக் களைத்துப்போக சுகத்தை நாடியலைந்த மனம்மட்டும் ஸூக்ஷ்ம ஸ்வரூபமானதால் களைத்துப்போகாது, தேஹம் அயர்ந்து கிட்க்கவும் தான் சுகந்தேடி அலையும். அது எந்தத்தேஹத்தைக் கொண்டு வியவஹரிக்கிறதோ அதற்குப் "புரியஷ்டகம்" என்றும், "ஸ்வப்ன தேஹம்" என்றும், "ஸூக்ஷ்மசரீரம்" என்றும் பேர்சொல்வர்.

"மாயனை நாடி மனநெடுந்தேறேறி
போயின நாடறியாதேபுலம்புவர்"—என்பது—திருமந்திரோபதேசம்.

இந்த "மனத்தேர்" ஏறி சுகத்தைத்தேடி யலையும் மனோதத்துவாத்மகனான ஜீவன் முதலில்,—

"உடலுண்மை யென்றே யுல்கை யாய்ந்திடும்
உடலுக்கின்ப மூல்கிலே யென்றிடும்
உலகெலாந்தேடி யலுத்தது போனபின்
உடலைவிட் டுயிரிலே யின்பத்தைத் தேடிடும்"

" இன்பத்தைத் தேடி யிகசுக நாடிடும்
இன்பமிகத்திற் கண்டத னுண்மை யுணர்ந்தபின்
மின்னற்போலது மறைவதென் றொறுக்கும்
ஒறுத்தபி னுண்மையை உலகிலே தேடிடும்."

இப்படி இகசுகந் தேடியலைந்து அதுநிலையற்ற தென்றுணர்ந்த ஜீவன் உலகத்தின் ஸ்வபாவத்தை யறிந்துமறியாமல் அல்லற்படும்.

ஏனெனில், அதன் உண்மை யறியமாட்டாமையால்.

‘உலகமோ கானற்சலமாம் கடுவெளித் தோற்றம்
உலகமே சதமெனி லுண்மை யதுபோற்படும்
மலமிகு சிந்தையை மாயையி லாட்டிடும்
மாலுமியில்லா மரக்கலமாக்கிக் கடுவெளி தன்னிற்
[கரைந்திடு மதுவே.

“மலமிகு சிந்தையை மாயையி லாட்டிடும்” சக்தி “கானற்சலமாம் கடுவெளித் தோற்றமான” ஜகத்துக்கு எங்கேயிருந்து வந்தது? இதை யுள்ளாய்ந் துணர்ந் தறிவார் யாரோ அவரே விவேகி யென்னப்படுவர். பொய்யான ஜகத் தோற்றத்துக்கு மெய்யானதோர் சக்தி யுண்டாயிற் றென்றால் அதை யெப்படி நம்புகிறது? பொய்யிலிருந்து மெய் யுண்டாகுமா? அவரை போட்டால் துவரை முளைக்குமா? முளைக்காதுபோல பொய்யான ஜகத்திலிருந்து மெய்யானதோர் சக்தி யுண்டாகமாட்டாது. இந்தமட்டும் உண்மை யென்று உறுதிப்பட்டால், “மலடிமகன் கரடி பழகி திருடியை அடிக்கிறான், எல்லாரும் வேடிக்கை பார்க்க வாருங்கள்” என்று ஒருவன் பறை அறைந்து கூறினால், அதைக்கேட்டு ஊரெல்லாம் பாழாக எல்லாரும் வேடிக்கைப் பார்க்கப்போன கதையாக முடியாமல், சிறிது மனவிஸ்ராந்திக்கு இடமுண்டாகும். அதாவது ஓடியலுத்த மனம் ஓய்ந்து உட்கார்ந்து களைதீர இடமுண்டாகும்.

“மலடிமகன் கரடிபழகி திருடியை அடிக்கிறான்” என்கிற வசனத்தைக்கேட்டதும், ஏதோ வேடிக்கை நடக்கிறது பார்கப்போகலாம் என்று நினைக்கும் மனம் இருளடைந்து மூடம் நிறைந்த மனம். அது சப்தவிகாரமாத்திரத்தினாலே கூத்தாடி குதிக்குந் தன்மை வாய்ந்தது. ‡ பதார்த்தம் என்பது இன்னதென்றேயுணராமல், கேவலம் சூத்திரப்பொம்மைபோல், சப்தவிகாரத்தினாலேயே யாடத்தக்கது. காதில் விழுந்த சப்தத்தைக் கிரஹித்து பதத்தை யுணர்ந்து, பதார்த்தத்தை விசாரித்து, விசாரித் தறிந்த பதார்த்தங்களின் தொடர்பை இலக்கணமுறையாலே, வாச்சியார்த்தம்செய்து, வாக்கியத்தை மனத்தில் வாங்கிக்கொண்டு, வார்த்தைகளினின்றும் வாச்சியார்த்தத்தைப் பிரித்து, முட்டையிட்ட பக்ஷி கூட்டிலிருந்து அடைகாப்பதுபோல், வாச்சியார்த்தத்தை உள்ளத்திலிருத்தி “இடையறாத்தியானம்” என்கிற அடைகாத்து, முட்டையிலிருந்தும் பக்குவ முதிர்ச்சியில் குஞ்சுண்டாவதுபோல், “வாச்சியார்த்தத்தின் இடையறாத் தியானத்தினால்” லக்ஷியார்த்தம் என்னும் ஸ்வரூபஞானமாகிற குஞ்சு பொறிக்கப் பார்க்கிறவன், “பார்ப்பான்” என்று சொல்லும் இருஷியாவான்.

ஞானசட்சுஸ் கொண்டு பார்ப்பான் காலதேச, பரிச்சின்னங்களை விட்டு வஸ்துவையே பார்ப்பான். வஸ்துதரிசனமானவனுக்கு மாயை மயக்கும் காயமூடக்கும் இல்லை. காரணம் ஒன்றையேபற்றி நிற்பான். “தியானம் நிர்விஷபம் மனஃ” என்று சுருதிகூறுவதால், விஷயவாசனையற்று விளங்கும் அவன் மனம் நிர்மல சுத்தமாய் நிருபாதிகமா யிருந்து வேலைசெய்யும். அப்படிப்பட்ட மனதை தேஜோமனம் என்று சொல்வர். “சோதியே, சுடரே, சொல்லிறந்த மதியே, ஆதியே, அநாதியே!” என்று சொல்லும் நாமங்களுக்குள்ள லக்ஷியார்த்தத்தையுணரக்கூடிய மனம் இந்த தேஜோமனமே. “ஜோதிரந்தர்க்கதம்மநஃ” என்று சுருதிகூறும் இம்மனத்தினாலே ‘காரியகாரண தோரணை’ யறியலாம். ‘காரியகாரணதோரணை’யென்பது பரிணாம விதியை யொட்டினதாகும். “Evolution is the Law of Life” என்ற Pythagoras என்னும் தத்துவஞானி சொல்லியதின் உண்மை யிதுவே. காரியகாரணதோரணை யறிந்தார் உடலுயிர் உண்மையறிந்தார். உடலுயிருண்மை யறிந்தார் அவற்றின் உறவையும் உள்ளபடி யறிந்தவராவர். உடலுயிருண்மையுறவின் அறிவே “அத்வைத ஞானம்” என்று சொல்வது.

‡ பத-அர்த்தம்=பதத்தின் பொருள் அல்லது லக்ஷியம்.

இவ்வாறாக "தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாக"வும், "முனிவிலாததோர் பொருளது கருதல்" என்னும் விஷய ஞானமில்லாத நிர்விஷய ஞானம் உண்டாகும். நிர்விஷயப்பட்ட மனமே மாயாரூபி. இந்த மாயாரூபியான மனம் 'திரண்ட பெண்ணுக்குச்' சமானம். திரண்ட பெண்ணுக்கே (தேஹ பக்குவம் சித்தித்த பெண்ணுக்கே) விரகதாபம் என்கிற மனோவிகாரம் உண்டாகும். விரகம் என்பது ராகதத்துவத்தினுடைய விசேஷ இயக்கம். ராகமென்றால் விருப்பு. விருப்பம் என்பது உள்ளத்திலிருந்தெழுமோர் உண்மைச்சக்தியின் விகாரம். அந்த உண்மைச்சக்தியின்உபாதிரஹிதமே தெய்வம். அந்த உண்மைச் சக்தியின் உபாதிஸஹிதமே தெய்விகம்: தெய்வம், தெய்விகம் இரண்டும் தேவன், தேவி. இவர்களிருவரும் உயிருடல்போல் அத்வைத உறவினராதலாலும் இவர்களுடைய சம்பந்த மாத்திரமான குலமும் அந்த அத்வைதமான உறவிற்கு வேறிலாமையால்,

"ஒன்றேகுலமும் ஒருவனே தேவனும்" என்று திருமூலதேவர் திருமந்திரோபதேசஞ் செய்தனர். இப்படியாக ஆதியாயுள்ள "ஆஸ்திகசித்தம்" என்பதிலிருந்து அத்வைத ஞானமும், அதிலிருந்து மன்குல ஒற்றுமையும் "ஏகம் பிரஹ்மம் ஸத்யம்" என்கிற சுருதி வாக்கிய உண்மையும் உண்டாகிறது. ஆஸ்திக சித்தம் காரணமாக வுண்டாகுங் குணமும், சமயநெறிபற்றிய சன்மார்க்கமும் நன்மார்க்கமுமிது. இந்த ஆஸ்திக மதத்திலிருந்துண்டாகும் கேடு என்னவெனில், "ஆறுகோடி மாயாசக்திகள் வேறுவேறு தம் மாயைகள் தொடங்கின" என்றபடி மாயாசக்திகள் "வேறுவேறு" தம்மாயைகளைக் காட்டத்தொடங்குவதாம். இந்த மாயைக்கு சக்தி யெங்கிருந்து வந்ததெனில்,

"உலகமேச்தமெனில் உண்மையதுபோற்படும்" என்று சொல்லியவாக்கியத்தின் லக்ஷியார்த்தத்திலிருந்து வந்தது என்று சொல்வோம். இதைப்பற்றி விரித்தெழுதில் விளங்கா தாகையாலும் அதன் உள்மர்மத்தைக் குருமுகமாகவே தெரிந்துகொள்ள வேண்டுமாதலாலும், அந்த லக்ஷியார்த்தத்தைச் சாதிக்கும் சாதனமுறையை விட்டுச் சாத்தியமான தொன்றையே சுட்டிக்காட்டுவோம். மாயாசக்திகள் என்றது சங்கல்பசக்தி யொன்றேயாம். சங்கல்பசக்தியானது "உலகமேசதமெனில் உண்மையது போற்படும்.

இந்தச் சங்கற்ப சக்தியொன்றே வேறுவேறுவேஷம் பூண்டு ஆறுகோடிமாயாசக்திகளாகத் தோன்றும். இந்த மாயா சக்திகளைக் கொண்டு உலகத்தை யாட்டுவிக்கலாம்.

விரகதாபம் கொண்ட பெண்ணை விடபுருஷன் ஒருவன் உத்தமனாகில் கைபிடித்துக் கடிமணம்செய்து இல்லறநெறியில் நல்லறம் புகட்டி ஆத்மபூரணத்தில் வேற்றுமையின்றியே கரையேற்றியும் வைக்கலாம். அவனே பின்னும் அதமனாகில், ஆசைகாட்டிமோசஞ் செய்து கற்பையழித்தவள் பொற்பை (உள்ளழகை)க் குலைத்து பாதகவழி செலச்சாதகனாகியே சிறுமைப்படுத்திச் சிரிப்பாணிகாணலாம். அப்படிபோலவே ஆத்மநெறியில் உள்ளத்துணர்வொரு பக்குவப்படுந்தோறும் மனத்தெழு கிளர்ச்சியை நல்வழிதனிலும், தீவழியதனிலும் தெரிந்தே நடத்தலாம். முன்னவர்தாமே சற்குருவாவர்; பின்னவரவரே அசற்குரு என்க. இவர்களைக் காரண குருவென்றும் காரியகுரு வென்றும் சொல்வர். முன்வழியதையே நல்வழியென்றும் "ஸமயநெறி" யென்றும் செப்புவர் மேலோர். பின்வழியாமதைப் புறக்கடைவழி யென்றும் "புன்னெறி" யென்றும் புகலுவர் புலவர். இவற்றையே White magic என்றும் Black magic என்றும் வழங்குவர் அபரோர்.

"ஆஸ்திகசித்தம்" (Religious feeling) குறைந்து வருகிற இக்காலத்தில் நாம் முன்

னுக்குவருவதெப்படி! யென்று பெங்காளிபத்திராசிரியர் எங்குகிறார். ஆஸ்திக சித்தம்தன்னில் நாஸ்திகமானதோர் இராச்சிய விஷயங்களை முட்டச் சேர்த்து ஒட்டவைப்பதினால் கஷ்டமே மிகவும் கைகண்டபலனுமென்று இந்தியா கவர்ன்மெண்டார் இடித்துரை கூறிகின்றார். ஆஸ்திகசித்தமாம் ஊற்றிலிருந்து ஊறுமோர் உணர்வும் கிளர்ச்சியேயாக வஃதை நல்வழி, தீவழி யிரண்டிலும் ஓடச் செய்யலாம் என்பதைச் சுட்டிக் காட்டுவான் சூக்ஷ்மமதாகவே சூசிப்பித்தோம்.

---

## Easy Lssons in Economics—III.

## குடிவாழ்க்கை.

### பாடம் - 3.

### தொழில்.

*(Specially written for the Vivekachinthamani.)*

மனிதன் செயலின்றி அவனுடைய உபயோகத்திற்கு சாதகமாகும் பொருள்களெல்லாம் இயற்கையாலே உண்டாவனவல்ல. பூமி முதலிய சிருஷ்டியின் ஒவ்வொரு பதார்த்தமும் இயற்கைப் பொருளேயாகும். மரவகைகளும், பயிரிடப்பட்டும் தானாகவளர்ந்தும் காணப்படும் சகலபுல்பூண்டுகளும், இரும்புமுதலிய லோகவகைகளும் இயற்கைப் பொருள்களே. பூமியைத்தவிர மற்ற பதார்த்தங்களும், விதைத்துப்பயிரிடுவதினால் உண்டாகும்தானியவகைகளும், விதைபோட்டுத் தண்ணீர் பாய்ச்சி வளர்த்த மரவகைகளும், பயிரிட்ட பருத்தியைக்கொண்டு நெய்த ஆடைகளும், இரும்பு முதலிய லோகங்களினால் செய்த பலவிதக் கருவிகளும் நாம் உண்டாக்கினவை, இயற்கைப்பொருளல்லவென்று நினைக்கப்படுகிறது. ஆயினும் இவ்விஷயங்களில்இயற்கைப்பொருள்களை உருபேதப்படுத்துமதொன்றே மனிதனுடைய செய்கையாலானதேயன்றி மற்றெல்லாம் பொருள்களின் இயற்கையான குணங்களின் தன்மையென்பதை நாம் அறியவேண்டும்.

உலகத்தில் ஏற்கனவே உள்ள சாரங்களுக்கு ஓரணுவைக் கூட்டவாவது, அவைகளின் ஓரணுவைக்குறைக்கவாவது மனிதனாலியன்ற காரியமல்ல. பயிரிட்ட தானியத்தைப்பலமடங்காக அறுத்துக்கொள்ள மனிதன் நிற்கவேண்டியவனே தவிர, அவன் கைச்சாதுரியத்தினாலேயே பெருகிவரும்படி செய்கிறானென்பது ஒவ்வாது. பூசாரத்தினாலும், சூரிய வெப்பத்தினாலும், காற்றினுதவியினாலும், விதைத்த விதையினின்று பயிர்முளைத்து அதற்குரிய இயற்கையின் கிரமப்படி வளர்ந்து பலனைக் கொடுக்கும். விதை, மண்ணுடன் தக்க காலத்தில் சம்பந்தப்பட்டு, நீர் முதலிய உதவியையும் ஏற்றபடி பெற்றால், அது முளைத்துத் தளிர்த்துப் பலனைக் கொடுப்பது மனிதனிட்ட ஆக்கினைக்குப் பயந்து செய்த காரியமன்று.

கிரமமான பருவத்தையும், பூசாரத்தையும், நீர்வளப்பத்தையும் செவ்வையாயறிந்து மண்ணுடன் விதையைச்சேர்க்கும் தொழிலொன்றையே மனிதன் செய்யத்தகும். நீரை மண்ணுடன் கலக்கச் செய்யவும் வல்லமை படைத்தவனே. அதாவது, சம்பந்த மற்றுப் பிரத்தியேகமாயிருந்த நீர், மண், விதைமுதலிய பொருள்களை சம்பந்திக்கும்படி செய்யும் வல்லமை யொன்றே மனிதனுக்குள்ளதெனலாம். ஆகையால் நாம் தனித்தனியான பொருள்களை சம்பந்திக்கும்படி செய்வித்தோமானால், அவைகளுக்குள்ள இயற்கையான குணங்களுக்குத் தக்கவாறு பலனையடைகின்றோம். பயிரிடுவதொன்றில் மட்டுந்தான் இவ்விதமாக நம்முடைய வல்லமைக்குப் பூர்ணமான இடமில்லையென்று எண்ணக்கூடவில்லை. பருத்தியைப் பயிரிட நாம்செய்யும் தொழில் அற்பமே

யாயினும், விளைந்த பருத்தியைக் கொண்டு ஆடைகளைச் செய்வதில் நம்மா லாகவேண்டிய தொழில் அற்பமானதல்லவென்ற எண்ணமுதிப்பது சாதாரணம். விஸ்வகர்மாவின் சிருஷ்டிதானோவென்று ஊகிக்கும்படியான யந்திரங்களைச் செய்து அற்புதமான வேலைகளைச் செய்வது மனிதனுடைய புத்தியின் காரியமாகையாலும், மனிதனின்றி அவை எக்காலத்திலும் தங்கள் இயற்கைகுணத்திலிருந்து இவ்வித நிலைமைக்கு வராதாகையாலும், அவை முழுவதும் தன் கைசாதுரியத்தின் சிருஷ்டியென்று மனிதன் நினைக்கின்றானாயினும், அவன் சிருஷ்டித்தது ஒரு அணுவேனுமில்லையென்றே கருதவேண்டும். பூமிக்குள் மறைந்துகிடந்த இரும்பை ஸ்தானபேதப்படுத்தி, அத்துடன் கலந்திருந்த மற்ற பொருள்களை வேறுபடுத்தி, இரும்புப்பொடிகளைமட்டும் ஒன்று சேர்த்து பல ரூபபேதங்களை யுண்டாக்கி, ஏற்கனவேயுள்ள இரும்புக்கு யந்திரம் என்ற ஓர் நூதன நாமத்தைக்கொடுக்கின்றானே யல்லாமல் புதியதாய் அவன் எந்தப்பொருளையும் செய்வதில்லை.

மரங்கள் வனங்களில் இயற்கையாகவே வளர்ந்து புஷ்பித்துக்காய்த்துப்பழுத்து மனிதனுடைய ஜீவனத்திற்கு ஆதாரமாகலாம். இயற்கையி லமைந்த குகைகளில் வசித்து, ஆடைகளின்றியும், தாமாக வளர்ந்த மரங்களின் பழங்களைப்புசித்தும் மிருகங்களைப்போல் காலங்கழிப்போருக்கு இயற்கைப் பொருள்களே ஜீவனத்திற்குப் போதுமான சாதனமாயிருந்தாலும், கனிமுதலிய உணவுகள் மனிதன் வயிற்றைத் தேடிவரச் சக்தியற்றவையாதலால், அவைகளைத் தேடியடையும் தொழில்தானுமின்றி உயிரைக் காப்பது முடியாத காரியம்.

தொழில் பல பிரிவுடையன. நெல்பயிரிட்டு அறுத்துச் சேர்க்க வேண்டியதாயிருக்கிறதன்றி, குத்தி அரிசியாக்கி சமைத்தபின் தான் உணவுப்பொருளாகும். கோதுமை பயிரிட்டு சேகரித்தபின், அதையரைத்து நொய்பிரித்து ரொட்டியாகச் செய்தபின்புதான் உணவுக்கு யோக்கியமாகும். தானியங்களைப் பயிரிடக் கலப்பை மாடு முதலியவைகளும், தண்ணீர்பாய வாய்க்கால், அணைக்கட்டு, மதகு முதலிய சிற்பவித்தையினால் உண்டாக்கப்படும் சாதனங்களும், வேலிகட்டுதல் காத்தல்போன்றவைகளும், தானியங்களை வயலினின்று களத்திற்குக் கொண்டுவந்து வைக்கோலினின்று விடுவித்து, அவசியமான விடங்களுக்குக் கொண்டு போய்ச் சேர்ப்பதும் அவசியமாகின்றது. இவற்றிற்கு மரம் இரும்பு முதலியவைகளால் செய்யப்பட்ட கருவிகள் வேண்டுமாகையால் அச்சாதனங்களை யடைய தொழில் செய்வோருதவியும் பயிரிடுபவருக்கு வேண்டியதாயிருக்கின்றது.

T. C. வேங்கடரமணய்யர்.

# *"My Property"—A Tell Tale Tantram.*

## "என் சரக்கு"—ஓர் உளவறிதந்திரம்.



"We are as elastic as the gas of gunpowder, and a sentence in a book, or a word dropped in conversation, sets free our fancy, and instantly our heads are bathed with galaxies and our feet tread the floor of the pit. And this benefit is real, because we are entitled to these enlargements, and, once having passed the bounds, shall never again be the miserable pedants we were."—*Emerson.*

### 1. காயக்கப்பல் சரக்கேற்றிப் போகுதல் (பிறப்பு).

பஞ்சபூதப் பலகை கப்பலாய்ச் சேர்த்து
பாங்கான ஒக்குமரம் பாய்மரம் கட்டு
நெஞ்சும னம்புத்தி ஆங்காரஞ் சித்தம்
மானுபி மானங் கயிறுகச் சேர்த்து
ஐந்தெழுத் தைக்கட்டிச் சரக்காக ஏற்றி
ஐம்புலன் தன்னிலே சுக்கா னிறுத்தி
நெஞ்சு கடாக்ஷத்தால் சீனிப்பாய் தூக்கி
சிவனுடைய திருப் பொருளைச் சிந்தையில் நினைத்து
தஞ்ச லானந்த வெள்ளத்தில் தானே
அகண்டரதம் போகுதடா—ஏலேலோ ஏலெலிலோ.

### 2. சிதாபாஸன் கப்பல் தள்ளுதல் (வளர்ப்பு).

களவையுங் கேள்வையுந் தள்ளுடா தள்ளு
கருணைக் கடலிலே தள்ளுடா கப்பல்,
நிர்க்குணந் தன்னிலே தள்ளுடா தள்ளு
நிறைந்தபரி பூரணத்தால் தள்ளுடா கப்பல்,
† மூக்கணை மூன்றையுந் தள்ளுடா தள்ளு
முப்பாழுக் கப்பாலே தள்ளுடா கப்பல்,
திக்குத் திசையெங்கும் தள்ளுடா தள்ளு
திருமந்திரஞ் சொல்லி தள்ளுடா கப்பல்,
பக்கமுடன் கீழ்மேலுந் தள்ளுடா தள்ளு
பரவெளிக் கப்பாலே போகுதடா கப்பல்.—ஏலேலோ ஏலேலோ.

### 3. அருளானந்த வெள்ளத்தில் கப்பலழுந்துதல் (மறைப்பு).

தந்தைதாய் சுற்றமும் சகலமும் மறந்து
தாரம் சகோதரம் தானதும் மறந்து
பந்தமும் நேசமும் பாசமும் மறந்து
பதினாலு லோகமும் தன்னையும் மறந்து
இந்திரியர்கள் இரட்சித்த கப்பலி லேறி
ஏகாந்த மானதொரு கடலிலே தள்ளி
அந்தரமான வெளியரு ளானந்தந் தானான
வெள்ளத்தி லேலேலோ அழுந்துதையா கப்பல்.—ஏலேலோ ஏலேலோ.

ஏலேலோ ஏகாதம் சர்வரதம்
பிரஹ்மரதம் ஏலேலோ ஏலிலேலோ.

† நாசிகாக்ரம், நாசிமத்தியம், நாசிகா மூலம் அல்லது புருவத்தின் அடி, நடு, நுனி, ஆகியமூன்றும் ஜாக்ர, ஸ்வப்ன, சுஷுப்தி என்கிற மூன்றிணைகள் (ஆவரணத்தடைகள்) இருக்கு மிடமாம்.

*“ சாயச் சரக்கெடுத்தே † சாதிலிங்கந் தான்சேர்த்து
மாயப் பொடிகலந்து வாலுழுவை நெய்யூற்றி
பொட்டென்று பொட்டு மிட்டால் புருவத் திடைநடுவே
இட்ட மருந்தாலே என் கண்ணம்மா !
இவ்வேஷ மானேனடி !”—அழுகணிசித்தர்.

1.

“அஹம்பாவக் கூத்தோ அறக் கூத்தோ?

“செட்டியார் முடேக்கோ சரக்கு முடேக்கோ! என்பது பழமொழி. அதன் பொருள் எல்லாருக்கும் தெரிந்தேயிருக்கிறது. வெள்ளையாய் எடுத்துச் சொன்னால் வீண்தோஷம் சம்பவிக்கும். ஆகையினாலே பழமொழியைப் பழமொழியாகவே யுபயோகித்தல் நலம். வியாக்கியானம் செய்தால் வில்லங்கம் வரும். இக்காலத்தில் விவாகம் நம்முன்னோர்கள் ஏற்படுத்திய ஸநாதனமான ஆத்ம லக்ஷியத்தை மேற்கொண்ட ஆத்மவிவாஹமாக வில்லாமல், ஸ்ரீரங்கம் சந்தையில் மாடுபிடி சமாசாரமாகவும், செட்டியார் சரக்குப்பிடிக்கிற தோரணையாகவுமிருக்கிறதென்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயம். தர்மதேவதை நாலு காலாலும் ‡ நடந்து நிருத்தமிட்ட இப்புண்ய பூமியில் இப்பொழுது கலியின் (‘தேஹோஹம்’ என்கிற கொடிய பாவனா முதிர்ச்சியின்) கொடுமையினால் தர்மம் ஒடுங்கி அதனால் தர்மதேவதை கால் முடங்கிப் படுத்திருந்தாலும், ஒற்றைக் காலை மட்டும் தூக்கிவைத்துத் தான் எழுந்திருக்கும் பாவனையாக விருக்கிற சூக்ஷ்மம், உண்மையில் உணரமாட்டாதாரும் கோயில்களில் தர்ம தேவதையாகிய நந்தி ஒற்றைக் கால் தூக்கிப் படுத்திருக்கும் பாவனையாக அமைத்திருப்பதால் மூடமாய் அறிவார்கள். மூடமாய் என்றதனால் மூடபக்தியினால் என்று கொள்ளல் வேண்டும். மூடரும் பக்தியினால் உண்மையுணர்வார்கள். கற்றறிமூடரோ பக்தியுமின்றித் தானா யுணரும் விவேக சக்தியுமின்றி வாய்மதம்பேசித் தான் கெடுவதன்றி தன்னையடுத்தாரையும் கெடுவழியில் கொண்டுபோய் சிக்கவைத்து எடுத்த ஜன்மம் பாழாகச் செய்வர். அம்மம்ம! இவர்கள் கெடுமதியை நினைக்கவும் மனங் கூசுகிறது. இதுநிற்க,

தர்மதேவதை கால்கள் முடங்கிப்படுத்தும் ஒற்றைக்கால் தூக்கியெழுந்திருக்கும் பாவனையாக வமைத்திருக்கும் தந்திரம் சுளுவாய் அறியத்தக்கது. தர்மம் அழிவற்றது. அது ஓங்கும், ஒடுங்கும். ஒடுக்கம் அதிகமான போது முடங்கும். ஆனால் அதை முடக்கித்தள்ளிவிட்டோமென்று சொல்லயாராலும் ஒண்ணாது. தர்மம் ஒடுங்கி அதர்மம் மேலிடும்போதெல்லாம் நான் அவதாரமாகி அதர்மத்தையடக்கித்தர்மத்தை நிலைநாட்டுகிறேன் என்று பகவான் கீதையில் அர்ச்சுனனுக்குபதேசித்த அபயவாக்காம் அவ்யக்த மந்திரத்தின் தந்திரமே (வியக்தலக்ஷணமே) நந்தியின் திருவுருவமைப்பு. இத்திருமயிலையில் ஐந்தாம் நாள் ரிஷபவாஹனாரூடராய் சேவைகொடுப்பதின் விசேஷமும், அச்சேவையிலுள்ள மஹிமையும் இதுவே. தர்மதேவதை நாலுகாலாலும் நின்று நிருத்தம் செய்யும்போது பகவானுடைய காணற்கரிய காட்சி ரிஷபதேவர்மூலமாய் எல்லாருக்கும் எளிதில் கிடைக்கிறது. ரிஷபவாஹனம் வாயிலிரையெடுத்தபடியே பகவானுடைய தரிசன பூரணத்தில் வாயசையாது கருவிகரணங்களெல்லாம்

* சாயச்சரக்கு - விஷயவாசனை முதிர்ந்த திரிகுணாத்மக ஸ்வரூப சங்கல்பவிருத்தி.

† சாதிலிங்கம் - சிவசத்தியருள்: “சாதியென்ற சத்திசிவ மருள்தன்னாலே யென்ற” சுப்பிரமணியர் ஞானம்” போதிக்கும் சித்தர் வாக்காலு மறிந்து கொள்க. சாதி லிங்கமென்பது ரஸகந்தக் கலப்பான ஒரு சரக்குமாம்.

‡ தர்மார்த்த காமமோக்ஷம், அதாவது அறம் பொருளின்பம் வீடு இவைநான்கும் நாலுகால்களாம்.

அசைவற்றுப்போக, அத்தரிசனத்தி லீடுபட்டு நிற்கிற பாவனை, வெள்ளி ரிஷபவாஹனத்தைக் கண்ணுற்றோர் உள்ளத்தில் தானாகப்படும்.

தர்மம் ஒடுங்கின காலத்தில் அது நசித்துப்போகாது பின்னும் எழும்பும் கிளர்ச்சியுடையதென்பது தர்மத்தின்ஸ்வபாவம். அது நந்திதேவர் பகவானையே கண்ணிமையாது பார்த்துக்கொண்டிருப்பது போல், பகவானையே சிந்தித்துக்கொண்டிருப்பார் உள்ளத்தில் பிறர்தூண்டுதலின்றி தானுயுதிக்கும் உள்ளக்கிளர்ச்சியாகவிருந்து விளங்கும். அந்த உள்ளக்கிளர்ச்சி காசு பணம், பேர் புகழ், கீர்த்தி அபகீர்த்தி, ஸ்வயநலம் பிறநலம் முதலான துவந்துவ(பேத)பாவனையினால் பாதிக்கப்படாதது. தர்மம் ஒன்றே லக்ஷியமாகி (ஏகிபாவமாய்) அதில் மனம்பூரவ தமைந்த புத்தியுள்ளதாய், தேஹோஹம் என்கிறபாவனையற்றதாய், அபார சக்தியுள்ளதாய் இயங்கி விளங்கும். "யாராலு மென்னை யமட்டவொண்ணுதினி, சீரார் பிரான்வந் தென்சிந்தை புகுந்தனன்" என்னும் திருமூலர்வாக்கு தர்மிஷ்டர் ஒருவருக்கே பொருந்தும். மற்றோர் அதன் மர்மத்தையறியார். அதன்சக்தியையு மறியார். அந்த தர்மிஷ்டர் உள்ளத்திலே உதயாஸ்தமனமின்றிப் பிரகாசித்துக் கொண்டிருக்கும் உண்மைப்பிரகாசத்தையும் உணரார். "ஏன் உணரார்?" எனில் "ஊனர்களானபடியினாலே!" அவர்களது மூடமான தேஹோஹபாவனையில் உள்ளன்புக்கிடமில்லையாதலால், அறிவிலாய்ந் தமர்தலாம் சக்தியின்றி "பரிந்து பலபேசுவர் பாரைச் சீர்திருத் தென்பர், அறிந்தறிந் துணரவோ ஆர்வமுமில்லை யென்பர், அரிதரிது கொடுமையிது! அநியாயமிது வென்பாரே!"

"என்பாரே யவர் எல்லா மறிந்தவர்போல்
வன்பேச்சுப்பேசுவர் வான்மேற் பழிபோட்
டென்பேச்சுக்கேளே னுண்மையுமுணரவல்லேன்
என்பேச்சுக் கேட்டேநீ யிவ்வுலகை யிரக்ஷியென்
[பார்."—'Vanity Fair'.

அவர்களுடைய 'விருதாவார்த்தை'யான இப்பேச்சுகளைத் தள்ளினாலோ, "அகம்பாவக் கூத்து" இஹம்பாவம் (இந்தலோகமேசதமென்கிற லோகாயதமதம்) நிறைந்து ஆடுவர். அந்த அஹம்பாவக்கூத்தைக் கண்ணிருந்து கண்டோர், அதை நன்றாக வரைந்திருக்கிறார். அகம்பாவக்கூத்தாடி அகச்செருக்கு மேற்கொண்டு அஹமுகப்பார்வையற்று உளக்கண் குருடாகி உலகையெல்லாம் தன் வழிப்படுத்தப் பார்ப்பார். "குருடனும் குருடனும் குருட்டாட்டமாடிக் குழியில் விழுந்தற்றே" யென்ற திருமந்திரத்துக் கிலக்காக இவர்கள் தானுங்கெட்டுத் தன்னையடுத்தாரையும் கெடுவழிகாட்டிக் கெடச்செய்வர். இவ்வளவும் தத்துவார்த்தம். தத்துவஞானமில்லாதார் "எல்லாந்தெரிந்தவர் போல்" "எட்டுச்சுரைக்காய் கறிக்குதவாது" என்று குதர்க்கவாதம்பேசுவர். இப்பேர்ப்பட்டவர்கள் வாயை அடக்குவது அசாத்தியமாயினும், இவர்கள் "அகச்செருக்கு" அதாவது "கொட்டம்" அடங்க, சாதனவழிபற்றிச்சாதித்தோரான சித்தர்கள் "கடுகைத்துளைத்தெழு கடலைபடைத்த" வாறு, இவர்களுடைய அசட்டுப்பேச்சில் ஆத்மார்த்தமான வுண்மை பொருந்தப் பலவாறு பாடியிருக்கிறார்கள். "ஸர்வம் பிரஹ்மமயம்" என்ப துண்மையானால், அகப்பேய்பிடித்த அசடர்கள்மொழியில்மட்டும் அந்தப்ரஹ்மம் இல்லாமற் போய்விடுமோ? போகாது! ஆகவே அகச்செருக்குற்றவர் படும்பாட்டையெல்லாம் ஸ்வானுபவத்தாலே யுணர்த்துவான் அகப்பேய்ச்சித்தர் என்பவர் அகப்பேய்ப் பாட்டுப் பாடியிருக்கிறார். ஸ்வயபுத்தியுமில்லாது, சொல்வார்பேச்சையும் இதாஹிதமறிந் துணருவதற்கு வேண்டிய விவேகமில்லாது, சிறு குழந்தை பிடிவாதம் செய்து தான் பிடித்தபிடியைநிறைவேற்றிக்கொள்ள அழுகையன்றி வேறுசாதனமறியாது, அழுகையையே அணியாகப் பூண்டு விளங்குவதுபோலுள்ள கோழைமனத்தர்கள் குறை நிறையைக்குறிப்பிட்டுக்காட்டுவான் ஒருவர் அழுகணிச்சித்தராய் முன் வந்து "ஞானசட்சுஸ்" என்றுசொல்லும்

"ஞானக்கண்ணேயே" குறியாகக்கொண்டு "என் கண்ணம்மா!" வென்று சொல்லிப் பிரலாபித்திருக்கிறார். அவருடைய பாட்டில் ஒன்று தான், இதன் முகப்பில் எடுத் தெழுதப்பட்டிருக்கிறது.

---

2.

"கலியாணக்கூத்தோ, கலிக்கூத்தோ?"

விவேகசிந்தாமணியை வாசிப்போர் எல்லாரும் 1909-ம் வருஷம் பிப்ரவரி, மார்ச்சு, எப்ரல் மாதங்களின் விவேகசிந்தாமணி சஞ்சிகைகளில் 'மாப்பிள்ளைதேடல் அல்லது காணமற்போன கட்டழகன்' என்ற மகுடஞ்சூட்டி ஸ்ரீஸத்யானந்தசாந்தசர்மா எழுதிய மூன்று விஷயங்களையும் நன்றாக வாசித்து மனதில்வைத்திருப்பார்களென்று எண்ணுகிறோம். அதில் "மாப்பிள்ளையென்றால் என்ன?" என்று துவக்கி, உண்மையில் உள்ளபடி இலக்ஷியம் கண்டதற்கு இலக்ஷணம் கூறியிருந்தார். அவர் யோகியானதால் பொறி புலன்களையடக்கித் தன் ஜ்யோதிர்மனதினாலேயே "யன்மனஸ்சிருஷ்டிஸ்திதிவ்யஸநகர்மக்ருத்" என்ற மண்டலப்ராஹ்மணோபநிஷத்வாக்கியப்படி, தான்தேடிய மாப்பிள்ளையைத்தன்னுள் தானே சிருஷ்டித்து வளர்த்து லக்ஷணங்கூறிப்பின்னர் லக்ஷியத்தில் தானே அந்த மாப்பிள்ளையை ஒடுக்கிவிட்டார். கலிமிகுந்த இக்காலத்தில் லக்ஷியார்த்தமான மாப்பிள்ளை (Ideal Bridegroom) கிடைப்பது அருவாயிருக்கிறதா? எங்குபோனாலும் "எதிர்ஜாமீன்" என்ன கொடுக்கிறாய் என்பது வழக்கமாயிருக்கிறது. குலம், கோத்திரம், குணம், மணம் எல்லாம் அப்புறம்தான். 'எதிர்ஜாமீன்' என்றால் முதல் ஜாமீனுக்கு எதிராக ஏதோ ஜாமீன்கேட்கிறார்கள் என்று வாச்சியார்த்தம் பண்ணிக்கொண்டு, "ஸ்வாமி! எதிர்ஜாமீன் கேட்கிறீர்களே, உங்களிடத்தில் ஜாமீன்கொடுக்க என்ன இருக்கிற"தென்றால் 'பிள்ளையிருக்கிறது' என்கிறார்கள். அப்படியென்றால் அவர்கள் உள்ளக்கருத்தையுள்ளபடி பச்சையாய்ச்சொல்ல, "உங்களிடத்தில் பெண்ணிருக்கிறது, எங்கள் பிள்ளையாண்டானிடத்தில் கோவணமிருக்கிறது. இன்னம் என்னவேண்டும்?" என்று அர்த்தமாகும். கோவணத்துக்குக் காசுகொடுத்துச் சிற்றின்பம் நாடினால் அதைத்தான் பண்டைக்காலத்து மறவும் மற்ற முட்டாள்களும் வியபிசாரம் என்று சொல்லியெழுதிவைத்துவிட்டார்கள். என் பெண்ணை நான் இல்லறம் நடத்தச் செய்ய எண்ணமேயல்லாமல், வியாபிசாரஞ்செய்யத் தயார்செய்ய வேண்டி நான் வரன் கேட்கவில்லையென்றால், ஆ! அப்படியா! அது தான்தர்மம்! 'இல்லறமல்லது நல்லறமல்ல' வென்று சொல்லியிருக்கிறதோ இல்லையோ! எங்கப்பா இந்திரனாயிருந்தார், அவரப்பா சந்திரனாயிருந்தார். எங்கள் சந்ததியே தெய்வீகமன்றி மானுஷீக மில்லை!" யென்கிறார்கள்.

இவர்கள் குலம் கோத்திரம் தெய்வீகமாயிருந்தாலும் சரி, இல்லாவிட்டாலுஞ் சரி! "மானுஷீக மில்லை" யென்பதுமட்டும் சத்தியம்! இது பின்னால்தான் தெரியவரும். தத்காலத்துக்கு வாய்தவறி வந்ததோர் உண்மையானதால், அதைப் பொய்யோடு பொய்யாகப் பொருந்த வைத்துத் தப்பர்த்தம் செய்துகொள்ள வேண்டியதுதான். எப்படியோ கெட்டலைந்து காணாத காட்சியெல்லாம் கண்டு, கேளாத வார்த்தையெல்லாம் கேட்டு, மூன்று நான்கு வருஷம் "காணமற்போன கட்டழகனை"த் தேடியலையும்போது, கலியாண தரகர்களான வைதிகப் பாவிகள் இவனை மோப்பம்பிடித்துக்கொண்டு, இவனுக்குச் சூழ்வினை வேறு செய்துவிடுகிறார்கள். இவனும் அலைந்தலைந்து அலுத்துச் சலுத்துப் போனான். தேங்காய்த் துண்டத்துக் காசைப் பட்டளவி யல்லவாதலால், புறைவைத்துப் பிடிக்க முடியாது. "மாப்பிள்ளை தேடித் தேடியலைந்து தேர்ந்தபழம் பெருச்சாளி யிது!

ஆகையால், இதைக்கூடுவைத்தே பிடிக்க வேண்டும். அந்தக் கூட்டிற்குள்ளும் பழந் தோசை போட்டால் ஊசல் வேகம் அறிந்துகொண்டு பழம்பெருச்சாளி "யிது தர்மசத்திரமல்ல பெருச்சாளிக்கூடு" என்று தெரிந்துகொண்டுபோய்விடும். கலியாணப்படிப்பு" பழந்தோசை போல் ஊசல் எடுத்துப் போய்விட்டது. ஆகையால் சுடச்சுட 'கமகம' வென்று வாசனையடிக்கும்படி நெய் சேர்த்து வார்த்த அடைசுட்டுக் கூட்டில்வைக்க வேண்டும் இதற்கும் விதியற்ற முண்டங்கள் பிண்டந் தின்றுகொண்டு எத்தனையோ இருக்கின்றன. அவர்களைப் பற்றி இப்பொழுது விசாரமில்லை!

அப்பன்எப்படியோ உத்தியோகம்செய்து அரைக்காசு வைத்துவிட்டுப் போய்விட்டால் அதைக்கொண்டு கௌரவமாய்க் காலக்ஷேபம் செய்துகொண்டு கலியாணச்சந்தையில் கிராக்கி பேசும் காளைகள் ஏதோ சில விருக்கின்றன! எங்கு பார்த்தாலும் ஏகாதசி விரதமும் துவாதசிக் கட்டளையுமா யிருக்கும் இக்காலத்தில், ஏதோ தக்காலம் அன்ன வஸ்த்ரத்திற் கிருக்கிற விடமா யிருந்தால் எப்படியாவது மானமாய்ப் பிழைத்துப்போவான் என்பது பெண்ணைப் பெற்றவனுடைய எண்ணம்! ஆனால் அப்படி நினைப்பவன் தர்மிஷ்டனாயிருப்பானாதலால், அவன் எதிர்ஜாமீன்" கொடுக்கும் வியபிசார விவாஹத்திற் குடன்படான். ஆகவே பெருமைக்காகவோ பேருக்காகவோ ஊசலெடுத்துப்போன "கலியாணப் படிப்பு"க்குப் பதிலாக, "கலியாண உத்தியோகம்" என்று ஒன்று புதிதாய்க் கிளம்பி யிருக்கிறது. "ஞானியின் பிள்ளை பைத்தியக்காரன்" என்றொரு பழமொழி யுண்டு. இது எப்படி யானாலும் "உத்தியோகஸ்தன் பிள்ளை தத்தாரி" யென்பது மட்டும் நிச்சயம். தத்தாரி யென்றால் காசு பண மில்லையென் றருத்த மில்லை. காசு பண மிருப்பதனால்தான் பணத்தை நம்பிக் குணத்தை யிழந்த குதர்க்க மார்த்தாண்டனாய்விடுகிறான்! ஐயோ பாவம்! இவர்கள் பால்யத்தையும் பின்வரும் கதியையும் நினைக்கநினைக்கப் பரிதாபம் மேலிடுகிறது!

"காணாமற்போன கட்டழகனை"க் கண்டுபிடித்தாய் விட்டது! உண்மையான உள்ளழகு பொருந்தியவனா யிருந்தால் அவன் விலையில்லா மாணிக்கம். லக்ஷ்மீநாராயணனைச் செய்யும் பூஜைக்குகந்தவனான சற்பாத்திர னாய்விடுகிறான். அப்படிப்பட்ட மாப்பிள்ளை பெண்ணின் பூர்வஜன்ம பூஜாபலனாலேயே கிடைக்க வேண்டும். மற்றப்படி குடுமி யழகும் கோவணக்கட்டழகும் மட்டும் பொருந்தியமாப்பிள்ளை யெல்லாம் மண்ணாங்கட்டி மாப்பிள்ளைதான். தாலி கட்டி யாகிறமட்டும் மாப்பிள்ளையின் குடுமி யழகும், கலியாண க்ஷவரம் செய்துகொண்டு காசியாத்திரை போவதற்காக மைதீட்டிய கண்களும், பொட்டிட்டநெற்றியும், மாப்பிளைக் கோலமும் மௌனவிரதம் பூண்ட வாயுமாய், பிள்ளை பார்ப்பதற் கழகாய்த்தா னிருக்கிறான். இந்த மேல்மினுக்கெல்லாம் தாலிகட்டுகிற மட்டும் தான். அப்புறம் மினுக்குத் தளுக்கெல்லாம் போய் குணக்குப்பிணக்கெல்லாம் கிளம்புகிறது! மனக்குரங்கு சும்மா விருக்காமல் வானரசேஷ்டையெல்லாம் செய்கிறது! "சும்மா விருக்கிறையா சொரூபத்தைக்காட்டட்டுமா?" என்று மாப்பிள்ளை உறுமிப் பயமுறுத்துகிறார். வெற்றிலை பாக்குச் சமாசாரம் முதல் நலங்கு விளையாட்டுச், சீர்சினத்தி வரையில் எல்லாம்மாப்பிள்ளையின் வானரசேஷ்டைக்குப்பயந்து கொண்டுதான் பெண்ணைப் பெற்றவர்கள் யோசித்து நடக்கவேண்டும். அத்தை, பாட்டி, கல்யாணத்துக்கு வந்தவர் போனவர், கெட்டவர், கழிந்தவர் நட்டவர், இட்டவர் எல்லாருக்கும் மாப்பிள்ளைமுகத்தைப் பார்த்துக்கொண்டுதான் மரியாதை செய்யவேண்டும்.

கலியாணத்திற் கூடவந்தது கழுதையானாலும், மாப்பிள்ளை சம்பந்திகளோடு அதுவும் கலந்து விட்டால், அதற்கும் ஸர்வோபசாரங்

களும் செய்து தீரவேண்டும். உபசாரசந்தோஷத்தில் அது தன் குரலைக்காட்டி விட்டால் மாப்பிள்ளை முகத்துக்காக அதன் காலில் விழுந்து "சுத்தாதேயப்பா வுன்காலில் விழுகிறேன்!" என்று கேட்டுக்கொள்ள வேண்டும். அத்தைபாட்டிகள், கலியாணத்துக்கு வந்த வம்பர்கள், வீணர்கள் இவர்கள் வைக்கும் சொட்டுகளுக்கெல்லாம் முதுகு கொடுத்துக் கொண்டு நிற்கவேண்டும்! கலியாணம் ஐந்து நாளும் எப்படியோ படாத பாடும்பட்டுக் கெடாத கேடும் கெட்டு சம்பந்திகளை யூருக்கு அனுப்பியாய்விட்டது! "அப்பா!" என்று ஒரு வாரம் கலியாணஞ்செய்த சிரமந்தீர எல்லாரையும் மறந்துஇளைப்பாற இடம் கொடார்கள். மாப்பிள்ளைக்குத் தாலிகட்டியானவுடனே பெண்ணின் அழகு தனதுமன்மதரூபத்திற்கு இசைந்ததாக வில்லையென்று நன்றாகப்பட்டுவிடுகிறது. அவன் நினைத்துக்கொண்ட ரதி இதற்கு முன் சொப்பனத்தில் மட்டும் தோன்றியவள், இப்பொழுது ஜாக்கிரத்திலும் அவன் முன் வந்து நின்று மோஹினிபோல் தன் அழகைக் காட்டி, "என்னைத்தள்ளி அந்தப்பெண்ணைத் தாலிகட்டினையே, என்னழகு அவளுக்குவருமா?" வென்று கேட்கிறாள்! மாப்பிள்ளைக்கு துக்கம் பொறுக்கமுடிகிறதில்லை! மோஹினியழகைப்பார்த்துவிட்டு, "என்னுடைய ரம்பைக்கு ஒற்றைக்கண் பொட்டை"யென்று சொன்னவன் கதையாக, எதிரே வந்த மோஹினியை ரதி யென்றேநம்பி, இந்தப்பெண்டாட்டி யெனக்கு அழகாக வில்லையென்று வீட்டிலுள்ளவர்களை யெல்லாம் வைய ஆரம்பிக்கிறான். தாயாருக்குப் பாவம்! பிள்ளையாண்டான் படும்துக்கம் பொறுக்க முடியவில்லை! அவளுடைய பெற்ற வயிறு புண்ணாகத், தானும் கூடவருந்துகிறார்கள். என்ன சமாதானம் சொல்லியும் பிள்ளையாண்டானுக்கு மனது சமாதானம் ஆகவில்லை! இவன் 16-வது பிராயமுதல் 23-வது பிராயம்வரையில் கலியாணமாகாமலிருந்து வேறு இடங்களில் கலியாணமானபெண்களெல்லாரும் இந்த மன்மதன் அழகைக்கண்டால் மோஹித்துப் போயிருப்பார்களென்று மனப்பால் குடிக்கிறான்! கலியாணத்துக்குப் போய்வந்தவீடு அல்லோல கல்லோலப்படுகிறது! பிள்ளையாண்டான் தன் சன்மமெல்லாம் பாழ்த்துப்போய்விட்டதென்கிறான். இந்தக்கஷ்டத்திற்கென்னசெய்கிறது பாவம்! பிள்ளையாண்டான் நடத்தை பார்ப்பவர்களுக்குப் பரிகாசமாயிருக்கிறது ! பெற்றவளுக்கு அப்படித் தோன்றுமா? எப்படியும் "காக்கைக்குத் தன் குஞ்சு பொன்குஞ்சு" தானே! மற்றவர்களெல்லாம் பிள்ளையாண்டான் ஆறுத்துயரைப் பார்த்துப் பரிஹாஸம் செய்ய, பெற்றவள் மட்டும், பிள்ளையைப்பெற்ற வாஞ்சையால் அவனோடு அனுதாபப்பட்டு அவன் எண்ணமெல்லாம் தன்னெண்ணமாகு மளவுக்குச் சிந்தாகுலப்பட்டு வருந்துகிறாள். தாய்க்கும் பிள்ளைக்கும் மனதொத்துப் போய்விட்டது! இனி உலகம், தர்மம், உண்மை யொன்றும் அவர்களுக்கு லக்ஷியமில்லை! எப்படியாவது தாயும் பிள்ளையும் மனமொத்திருந்தால் அதுவே போதும்!

பெண்புத்தி பின்புத்தியாதலால், பிள்ளையைச் சமாதானப்படுத்தவேண்டி அவன் ஆலோசனைக் கெல்லாம், உடந்தையாயிருந்து அவனபிப்பிராயங்க ளெல்லாம் தன்னதாகப் பாவிக்கிறாள். வேறுகலியாணம் செய்யவோ விதி (சட்டம்) இல்லை. நடந்ததைத் தள்ளவோ நிமித்தம் (காரணம்) இல்லை. ஆகவே பெண்புத்திக்குச் சூழ்வினைசகஜமாய் வருமாதலால், கைகேயியைப்போல் ஒரு யுக்திசெய்து தீர்மானம் கட்டுகிறாள். எல்லாரும் முன்னதாகப்பார்த்து மனம்ஒப்பிச் செய்த விவாஹத்தைத் தள்ளுவது லகுவல்ல! தள்ளினால் வேறுவிவாகம் செய்வது லகுவில் சாத்தியமல்ல; சாத்தியமானாலும் யுக்தமல்ல! ஆகையால் கைகேயிபுத்தியைக்கொண்டு எல்லாருங் கூடிப் பின்வருகிற

படி யோசனைசெய்து முடிவு கட்டிவிடுகிறார்கள்:—

"கொண்டவிடம் குலமும் கோத்திரமும் பொருந்தியதாயிருப்பதால், கிணத்துச் சலத்தை வெள்ளங்கொண்டு போகாது என்பது நிச்சயம்! தாலிகட்டின பெண்ணை ஒன்றும் செய்யமாட்டார்கள். தாம் பிள்ளைவீட்டுக்காராதலால், தமக்கு வேறுபெண் தேடுவதாகப் பாசாங்கு செய்வதில் லஜ்ஜை மானம் ஒன்றுமில்லை. ஸநாதநமான ஆத்மவிவாஹத்தை அக்நிசாக்ஷியாகவும் பிராஹ்மணாள் சாக்ஷியாகவும் ஆயிரம் சத்தியம்செய்துகொடுத்துவிட்டு, ஆயிரக் கணக்காகப் பணத்தையும் செலவு செய்து ஊரான் நடத்த, அவன்பெண்ணை தர்மபத்நியாய்க் கைநீட்டி க்ரஹித்துக் கொண்டபின் அதர்மம் செய்யத் துணிவானானால், அவன் துணிச்சலைக் கேடுகெட்டதோர் கலியுலகம் சிலாகித்துக் கொண்டாடினாலும் கொண்டாடா விட்டாலும், அவனைப் பாதகனென்றும், பஹிஷ்டனென்றும் தள்ளிவைப்பதில்லை. ஆகையால், 'கெடுவான் கேடுநினைப்பான்' என்பதை யுன்னாமல், வியவஸ்தை கெட்டுத் தான் ஆடினதே கூத்தாக ஆடலாம் என்பது இவர்களுடைய நாராலோசனையின் முடிவு.

3

## மாப்பிள்ளை முடுக்கோ மணமுடுக்கோ?

கலியாணம் ஆனபின் இரு குடும்பமும் நெருங்கிப் பழகுவதற்கு ஆஸ்பதமாகவும் போக்குவாத்துக்கு இடமாகவு மிருக்கும்படி வைதிகமாகவும் லௌகிகவும் பெரியோர் பல சம்பிரதாயங்களை யேற்படுத்தி யிருக்கிறார்கள்.

ஆடி யென்றும், ஆறுமாசமென்றும், தீபாவளி யென்றும், ஸ்தாலீபாக மென்றும், சோபன மென்றும் அநேக சுப சோபனதிகளிருக்கின்றன. இவையெல்லாம் சம்பந்திகள் மனமொத்துக்கலந்து ஒத்த உறவினராகுவதற்குச் சாதனங்களாக அமைந்தன. இதையெல்லாம் துர் வினியோகப்படுத்தி மாப்பிள்ளையைக் கிண்டிவிட்டுக் காசுபறிப்பதற்கான சமயங்களாகச் செய்து மனஸ்தாபத்தை விருத்தி செய்துகொண்டு, கடைசியில் மனஸ்தாபம் காரணமாக வேறு கலியாணம் செய்து விடுவதாக பயமுறுத்தி பெண்ணைப்பெற்றவனை ஓட்டாண்டியாக்கி விட்டுக், கடைசியில் பெண்ணுக்குப் பிறந்தஹமும் பாழாகிப் புகலிடமுமில்லாமல் சந்தியில் நிற்கும்படியான ஸ்திதியில் எவனாவது போக்குச்சாக்குக் கெட்டவன் பெண்ணைக்கொடுக்கவந்தால், வீண்வர்மத்தாலும், காமத்தாலும், கர்வம் தலைக்கேறி வேறு "விவாஹம்" செய்து கொண்டு தர்மாதர்மமென்கிற வியவஸ்தை கெட்டு, ஆயிரங்காலத்துப் பயிரான விவாஹதர்மத்தை யழித்துத் தானுமழிந்து, தன் குலமுமழிந்து, நலமுமழிந்து சாதிமதாசாரங்களு மழிந்து, ஊருக்குக் கேடாய் உலகுக்குப் பாரமாய், காமவெறியிற் பிறந்த குழந்தைகள் சிலவற்றை அநாதைகளாகவும் அயோக்கியர்களாகவும் விட்டு, பொய், பிறட்டுப், பித்தலாட்டங்களால் வயிற்றை வளர்த்துக்கொண்டு பேமானிகளாய்க் காலங்கழிக்கும் கசடர்கள் எத்தனையோ பேர்கள்! இவர்கள் நம்தேசத்தைக் கெடுக்கவந்த நாசகாலர்களே யன்றி, "மானுஷீகத் தன்மை" யென்பது இவர்களிடம் மருந்துக்கு மில்லை!

இவர்களுக்கு அனுகுணமாகப் புத்திகெட்ட பெண்பாலர் தர்மாதர்ம மின்னதென் றுணராமல் தம் மௌட்டியத்தால் ஹடம் சாதிக்கிறார்கள். நமக்குள் விவாஹம் என்பது காமத்தை வளர்ப்பதற்கில்லை: காமத்தை விடுவதற்கே யென்று இவர்கள் உணர்வதில்லை. உணர்த்தினும் கேட்பதில்லை. மாப்பிள்ளை பெண்டாட்டி வேண்டாமென்று முறுக்கின காலமெல்லாம் பொறுத்திருந்த கிரஹஸ்தன், "ஐயோ! 'இச்சாசக்தி உமாகுமாரி' என்பதைப் போல், அன்பிற்பிறந்து அன்பில் வளர்ந்து அன்புருவேயாகி, தனது 'இச்சாசக்தி' பே

போலும் உமாகுமாரியைப் போலும் வளர்ந்த பெண்ணை வேண்டாவெறுப்பா யிருப்பவன் வாசலில் கொண்டுபோய் எப்படி விடுகிற தென்று மனமொடுங்கி எப்படியும் நம் மானத்தை நாமே காப்பாற்றிக்கொள்ள வேண்டும்!" என்கிற உறுதியோ டிருக்கையில், கெடுமதியால் கேடுகெட்டு துராலோசனை செய்து சங்கற்பித்த கபடநாடகம், கடைசியில் தாங்கள் நினைத்ததுபோல் நடந்தேறுமை கண்டு, மானங்கெட்டு, மரியாதை கெட்டு, லஜ்ஜை கெட்டுத் தான்செய்ததை யெல்லாம் ஒளித்துக் காட்டிப் பொய்சொல்லிப் பலரிடத்தும் சொல்லாத வார்த்தைகளைச் சொல்லிப் போய் யனுதாபம் சம்பாதித்துக் கொண்டு, "என் பெண்டாட்டியை விடுகிறையா இல்லையா!" வென்று கலபைக்காரனைப்போல் கக்ஷி கட்டிக் கொண்டு, ஊரிலுள்ளவர்களை யெல்லாம் உடந்தையாய்ச் சேர்த்துக் கொண்டு விண்கலகம் செய்கிறான்! ஐயோபாவம்! இவன் புத்திபோன போக்கை யென்னென்றுசொல்கிறது!

"பனங்காட்டுநரி சலசலப்புக் கஞ்சாது!" என்றொரு பழமொழி யுண்டு. இப்பேர்ப்பட்ட யோக்கியதைகள் நிறைந்த விடத்தில் சம்பந்தம் செய்து, படாதபாடும் பட்டுக் கெடாதபடி யெல்லாம் கெட்டு, இந்தப் பேமானிகளுக்குச் சரியான சம்பந்தியாய் வெளியில் வந்து தலை நிமிர்ந்து நிற்க வெட்கப்பட்டுக்கொண் டிருக்கிறவன் இவர்கள் மனத்தையும் குணத்தையு முள்ளபடி யறிந்தவனானால், காய்ந்த பனவோலைகள் காற்றில் சலசலவென்று சப்திப்பதினால், ஏதோ அபாயம் வந்து விட்டதென்று நினைப்பானா? தர்மமேதலைகாக்கு மென்கிற திடசித்தத்தோடு இந்த மானிடப்பதர் காற்றில் அடிபட்டு ஓடுகிறபடியெல்லாம் ஓடட்டும்! சத்துள்ள தானியம் எப்படியும் சமையலுக்கே யாகும்! குப்பையிற் கிடந்தாலுங் குந்துமணி நிறங் கெடாது! என்றற்றொடக்கத்து வாக்கியங்களில் பக்தி சிரத்தையோடு லக்ஷியம் வைத்தவனாய் இவன் செய்யும் அட்டஹாஸங்களுக்கெல்லாம் ஆளாயிருந்தும், நிலை குலைந்து மனந்தளர்ந்து போகான்.

அவ்வளவு முன்யோசனையும் தைரியமுமில்லாதவர்கள், முன்னுக்குப் பயந்து பின்னுக்குத் துணிந்து இப்படிப்பட்ட பேமானிகளின் பேய்க் கூத்தை யடக்குவான் திரமாய் நடந்து கொள்வார்கள். எப்படியானாலும் தர்மபத்னி யென்று கைதொட்ட புருஷன் ஸஹதர்மிணியான பத்நியைக் கொள்வன கொடுப்பனவாம் சரக்காக மதித்து "என் சரக்கை யென்னிடம் ஒப்புவி" யென்று கேட்பானாகில் அந்த மதியிலியைப்போல நிர்மூடன் உலகத்தி லில்லை.

"மாப்பிள்ளை முடுக்கோ, மணமுடுக்கோ!" வென்று சொல்லும்படி, இது மாப்பிள்ளையின் குணவிசேஷத்தால் செய்யும் முடுக்கோ அல்லது மணமுடுக்கோ?

இது விஷயமாய் ஒரு கதையுண்டு. ஒரு குரங்கு மனுஷரூபம்தரித்து, ஒரு பெண்ணைக் கலியாணம் செய்து கொண்டது. பின்னர், தான் மணவினைசெய்து கொண்ட முடுக்கினால், அப்பெண்ணைத் தன் வீட்டுக்கு அழைத்துப் போகவேண்டுமென்று நிர்ப்பந்தம் செய்தது. தர்மத்துக்குக் கட்டுப்பட்டு நடந்துகொண்ட பெண்ணை அப்படியேவிட, அவளைக்காட்டு வழியே அழைத்துக்கொண்டு போயிற்று. அப்பெண் கால்நோவுற்றுக் களையுற்றுப்பசியுங்களையும் மேலிட்டு இனி நடக்கச்சக்தியில்லையேயென்று சொன்ன போதெல்லாம் 'சும்மாவிருக்கிறையா சொரூபத்தைக்காட்டட்டுமா?' வென்று பயமுறுத்தும், அந்தப்பேதைப்பெண் பயந்து பின்னும் பின்னும் பொறுத்து, வழிநடந்து நடுக்காட்டிற்போயும், வீடுவாசல் ஊர்பேர் ஒன்றுந்தெரியாமல் தன்னை மருட்டியுருட்டிக் கொண்டேபோன கணவனைப்பார்த்துக் கடைசியில் 'உமது சொரூபத்தைத்தான் காட்டுமே பார்ப்போம்' என்று சொல்ல, அது மானுடவேடம் மாறித் தன்ஸ்வரூபமான குரங்கு ரூபமெடுத்

துக்கொண்டு மரக்கிளைகளின்மேல் பாய்ந்து ஒடி விட்டதாகச் சொல்லும் ஓர் தத்துவஸாரம் நிறைந்தகதையுண்டு. அதுபோலக்குணக்கேடன் ஒருவன் நற்குடிப்பிறந்த குலப்பெண்ணைப் பார்த்து "நான் தான் உன்னைத்தாலிகட்டிவிட்டேன்! நீதான் தர்மத்திற்குக் கட்டுப்பட்டுவிட்டாய்! இனி நீ யென்வசம் நன்றாய்ச்சிக்கொண்டவளானாய்!" என்று சொல்லிக் காட்டுவானானால் அது குரங்கு மாப்பிள்ளை செய்து காட்டிய மணமுடிக்கை யொக்கும்!

அந்தக் குரங்கின் கதை யென்னாயிற்றென்று, அத்தை, பாட்டி, கிழவிகளுக்கும், சிறு பெண்களுக்குங்கூட நன்றாகத்தெரியும். அதர்மம் காலபலத்தால் சிறிது காலத்துக்கு தர்மத்தைப் பெண்டு கொண்டு தனக்குக் கீழ்ப்படும்படியாளும் பாக்கியம் பெற்றாலும், கடைசியில் தர்மமே தலையெடுக்கும்! அதர்மம் அதன் குலத்தோடு நிர்மூலமாயழிந்தேபோகும்! என்பது அக்கதையின் உண்மைப்போதமாம்.

மனமாகிய குரங்கு விஷயப்பற்றென்கிற காட்டைவிட்டு, விஷய நிவிர்த்தி யென்கிற கருணைவடிவாம் மானிடவுருவம் தரித்து, தர்மம் என்கிற "கருணையங் கடலாம்" பெண்ணைக் கலியாணம் செய்துகொண்டு, அப்பெண்ணை அதர்மம் நிறைந்த விஷயப்பற்றான காட்டில் இட்டுக்கொண்டுபோக, அப்பெண் விஷயப்பற்றில் நாட்டம் வைக்காமல் தானே தர்ம ஸம்வர்த்தனியாயிருந்து விஷயப்பற்றில் நுழைந்துவெகுதூரம் தனது விரக்தி வைராக்கியத்தால் சமாளித்தும், கடைசியில் சோர்வுற்றபோது தன்னைத்தாலிகட்டிய(அதாவதுஇங்கே தர்ம வேஷம்போட்டுக்கைப்பற்றிய) கணவன் மருட்டல் உருட்டலுக்குப் பயப்படாதவளாய் அவன்சொரூபத்தைக்காட்டச்சொல்ல, "காமத்தோடு கூடிய மனமாம் குரங்கு" தான் விஷயத்தில் பற்றுண்டுழலுவதைக்காட்ட, அவள் அது சகியாளாகி மூர்ச்சித்துப்போகப் பொறுமை யுருக்கொண்டு தர்மத்தையே சிந்தித்து வந்த அந்தப் பெண்ணை அவளுடன் பிறந்த ஆண்பிள்ளையான தீரம் என்னும் சகோதரன் வந்து விஷயப்பற்றுள்ள மனமாங் குரங்கையும் அதிலிருந் துண்டான பாப கர்மங்களாகியசந்ததியையும் நாசம்செய்து தன் வீரச்செய்கையால் அவளை (அந்தத் தர்மப்பெண்ணை) அதர்மத்தினின்று விடுவித்துப் பிறந்தகமாம் (தர்மஸ்வரூப)வீடுவிளங்க அவளை யிட்டுக்கொண்டு போய், வஞ்சகநெஞ்சோடு அங்கும் வந்த காம சங்கல்ப மனதாகிய குரங்குரூப மாப்பிள்ளையைத் தியான குஹை யென்கிற கிணற்றில் தள்ளி தர்மஸ்வரூபிணியான பெண்ணை முக்திவீட்டில் நிலையாக இருக்கச் செய்தான். கிணற்றில் விழுந்த மாப்பிள்ளை பிழைத் தெழுந்து விவேகமுற்றுத் தானும் ஆத்ம ஸ்வரூபியேயானாலும், "சாயச் சரக்கெடுத்தே"— திரிகுணாத்மகனாகி ரஜோ குணத்தி லீடுபட்டுள்ள விஷயவாசனை முதிர்ச்சியில், சிவசத்தியருளாம் "சாதிலிங்கம்" சேர்த்து, அணுத் திரளாய் விளங்கும் ஆணவமல மாயை சேர, அஃதை தியானஞ்செய்து தைலதாரைபோல் ஆணவ மலத்தியானம் முதிர்ந்து, "புருவத்திடை நடுவே பொட்டென்று பொட்டு மிட்டால்"— கிரியையாகாரமான ஆணவ மலத்தைப் புருவ மத்தியில் மைபாகக்கூட்டி, ஆவரண திலகமாகவே லலாடத்தில் தரித்ததனாலே, புருவமத்தியமான ஆஜ்ஞா சக்ரத்தில் அஞ்ஞான மருந்து சேர்ந்து(ஆத்ம பூரண பாவம் சிறிது கலங்கினதினாலே) ஞானப்பெண்ணாகிய "என்கண்ணம்மா!" நான் "இவ்வேஷமானேனடி!"—இப்படிக் குரங்கு வேஷமெடுத்து உன்னையும் படுத்தி, நானும் படாதபாடெல்லாம் பட்டுக், கடைசியில் கிணற்றில் வீழ்த்தப்பட்டுப் (பிரகிருதி வசத்தனாய்த் தியானாகாசகுஹையில் விழுந்து) பிழைத்ததினாக வுள்ள இந்த வேஷமெல்லாம் தரிக்கும்படியானேனடி! (ஆத்ம) புத்தி கெட்டுக் குரங்காய்ச் சமைந்தஎனக்கு இப்பொழுது உன்னருளாலே (ஆத்ம) புத்தி வந்தது! என்றபடி.

ஓம் காமேச பத்தமாங்கல்ய ஸூத்ரசோபித கந்தராயநம:

# * Root-Cure.

## The Sixteen-fold Remedy for the Sorrows of Life.

## ஆதிவைத்தியம்.

### "சோக நிவாரண ஷோடசீ" மாத்ரை.

[இந்த ஷோடசீ மாத்ரையானது ஸ்ரீபுர நகரி லுள்ள மலை ப்ரதேசங்களின் பேருப்ரஷ்டங்களில் அகப்படும். பன்னிரு மூலிகைகளைக் கொண்டு செய்து, புருஷார்த்தங்களான தர்மார்த்த காம மோக்ஷ மென்கிற (அறம் பொருள் இன்பம் வீடு என்கிற நாற்பால்) நல்வழி நான்கின் சொரூபசாரம் சேர்த் தரைத்துச் சிதக்னி தூண்ட லென்னும் உத்கிருஷ்டமான உலையில் வைத்து ஏகரஸமாக்கிச் செய்ததோர் புநிதமாத்ரை (அளவு). யோக ஸம்யமத்தால் சக்தியானுசாரம்உட்கொள்ள, உலகப்பேற்றில் பெரிதாம் 'மக்கட்பேறு' பெற்றுப் புநிதரான தம்பதிகள் பூர்வகர்ம வாசனையால் அவர்களை விட்டுப் பிரியும்போ துண்டாகும் மாசோகம் முதலான சோகமோகங்களைப் போக்கிச் சோக மோக நிவாரணத்தா லுண்டாகும் சோநுபாநந்த மென்னும் சோராத முத்திச் சுகமளிக்கும்.

ஸ்ரீபுரமென்பது வினைப்பயனின் சொரூபமாய் விளங்கும் 'விசுவகர்மா', சோகமோகங்களின் சாரமாய் விளங்கும் 'மயன்' என்கிற தேவாசுரத் தச்சர்க ளிருவரும் அவர்களுடைய கல்பசில்ப வித்வத்தினாலே "அறிவான் அறிவெனும்" ஸ்ரீதேவிக்கு வாசஸ்தாநமாக விருக்கும்படி நிர்மித்ததோர் அத்யற்புத புநித பட்டணமாம். அது நித்தியஞானம்என்கிற சமுத்திரமத்தியிலே ஷோடச (16) க்ஷேத்திரங்களுக்கிடையே ஷோடச (16) சங்கியையாலே யேற்பட்டது. இந்தப் பதினாறில் ஏழு திரவரூப சமுத்திரங்கள் (of the nature of Emotions of Rudratman the weeping Ishta); ஒன்பது கிரிரூப பர்வதங்கள் (silent but towering Thoughts of the One Thinker). இவைகளின் உண்மையை ஸ்வரூப சித்தர்களான முத்தர்களை யடுத்துச் சிஷ்டர்களா யிருந்து குருபரம்பரை மார்க்கத்தை யனுசரித்து ஏகீபாவ சித்தத்தோடு கேட்டு அப்பியாச முகத்தில் ஐயந்திரிபற அனுபவித்தறிதல்வேண்டும். "தேஹோஹம்" என்கிற பாவனையோடு 'அன்னமயகோசமாம் ஆகமே யுள்ளளவும், குருவை யடைந்து குருசொன்னபடி கேட்டாலே சுகமுண்டு].

---

"வீரமருந்தென்றும் விண்ணோர்மருந்தென்றும்
நாரிமருந்தென்றும் நந்தியருள் செய்தான்
ஆதிமருந்தென்றறிவா ரகலிடஞ்
சோதிமருந்திது சொல்லவொண்ணாதே."—திருமந்திரம்.

1. அறநெறிச்சொரூபசாரம். (தர்மசொரூபஸாரம்).

1. "அன்னமய கோசமா மாகமே யுள்ளளவுஞ்
சொன்படி கேட்கிற் சுகமடைவாய்!—என்னுனை
கெட்டபாழ் வாசனையைக் கிட்டாதே யாதேனு
மிட்டபடி கண்டே யுணர்."

---

* The cure that goes to the Root of Ills.

2. அசுபவாசனை சுபவாசனைகளை அனுபவமுறையானே யுணர்த்தல்.

2. அன்றொருநாள் துஷ்டப்பேய் மனமுன்னைச் சாலவுந்தான்
பின்றொடர்ந்து கஷ்டமிகச் செய்ததுகாண்—மன்றிலாடும்,
மாயவன்றன் கூத்திதென்று மாயம்போகக் கண்டதொரு
தாயமர்பொன் திருவாசிக் கூத்தைநினை.

3. † மனோபவம், பவோபவமிரண்டையும் அனுபவமுறையானே யுணர்த்தல்.

3. பின்னொருநாள் பேதைமனம் பற்றுவைத்த பாலைதேகம்
சின்னபின்ன முறக்கண்டு சோர்வடைந்தாய்!—அந்நாளில்,
என்னைமறந் தென்னன்னை யிட்டதொரு கட்டளையை
உன்னைமறந் துன்னுள்ளே வைத்துப்பிழை.

4. வியஷ்டிபேதமெல்லாம் சமஷ்டியிலொடுங்கி யொன்றுதல் காட்டிச், சமஷ்டிபாவ லக்ஷிய முணர்த்தல்.

4. வேறொருநாள் வேதனையால் வெந்தபோ துன்தேகம்
வேறொருவன் ஆகாமையால் வெந்ததுபார்!—என்தேகம்,
உன்தேக மென்தேக மென்னுமுறு பேதமெல்லாம்
பொன்தேக மானதொன்றைப் போற்று.

5. மாயாஜால மந்திர தந்திர சூக்ஷ்ம முணர்த்தல்.

5. உள்ளத்தே யுள்ளதொரு கள்ளமுடைப் பொய்நெஞ்சம்
வெள்ளமிகுந் தோடிவரச் செய்யுமது!—கானலாறு,
கரைகடந்தே யோடிவரும் கானல்ஜலம் பரவியெங்கும்
திரைகடலா யொலிப்பதைநீ தேர்.

6. அத்தியாஸ ஆரோபயுத்தியால் மனோசிருஷ்டியுணர்த்தல்.

6. மாலையிலே தூரவுள்ள மரக்கட்டை மனுஷனும்போல்
பாலையிலே யொளிர்கானல் ஜலமாகும்!—அஃதேபோல்,
மூலையிலே யிருட்டறையின் முளைத்ததொரு மாயமனம்
காலையிலே கனவியற்றல் காண்.

7. நித்தியமான ஸத்தியவொளி நீயாயிருக்க மித்தியா புருஷனும் மாரகன்மயக்கில் விழுந்த தென்னையென் றுசாவி யுணர்த்தல்.

7. மரக்கட்டை மனிதனாக மாறினதா ரோபம்போல்
பரக்கட்டை ‡ பாழ்மனதாய்த் தோன்றியது—ஸத்தியமிது,
நித்தியமான ஸத்தியவொளி நின்மனதில் தானிருக்க
மித்யாமாரன் மயக்கில்விழுந் துழன்றதென்னை!

† "மற்றொன்று மற்றொன்று மனோபவம் பற்றொன்று பற்றொன்று பவோபவம்." என்பது பெரியோர் வாக்கு.

‡ தாணுரூபமான (நிச்சலப்பொருளாம்) பரம்.

8. புருஷார்த்தம் நான்கில் பொருள்நெறிப்பாலாம் ஜீவத்துவ
(ஜீவார்த்த) சொரூபசாரமுணர்த்தல்.

8. "சுத்த சடமான சுக்கிலங்கெர்ப் பிகரித்துச்
சித்தத் துவங்கலந்து சீவித்துச்—சத்தியம்போல்,
வந்தபொழு திதெல்லாம் மாயையென்று தற்சொரூபஞ்
சிந்தைசெய்வா ரன்றோ சிவம்!"

9. அத்யாத்மயோக தீக்ஷையால் (சிவசக்தி ஸ்பர்சத்தால்) சொரூபதரிசன மூணர்த்தல்.

9. தாராகாந்தி திரஸ்காரி நாஸாபரண பூஷிதாவைப்
பாராத தோஷத்தால்நீ பரிதபிக்கிறாய்!—பாரப்பா,
பரத்தை மறைத்ததோர் பார்முதற் பூதங்கள்
பரத்தில் மறைந்ததோர் புதுமை!

10. சொரூப தரிசனங்காட்டிச் சொரூபத்தை மறைக்கும் சுவாஸனுரூப
மாயாவிலாஸ மூணர்த்தினதுணர்த்தல்.

10. உன்னைப்போ லென்னுடம்பு வேகவே யன்றுநான்
என்னைப்போ லுன்னையெண்ணி யேகமாய்த்—தான்கண்டு,
பொன்னை மறைத்ததோர் பூண்மணி யாரம்போல்
என்னை மறைதத்தோர் பூம்பாவை காட்டினேன். †

11. புருஷார்த்தங்கள் நான்கில் இன்பநெறிப்பால்பற்றி அஹப்பொருளின்பமா
யுள்ள தன்னைக் காமேசுவரர் மடியில் வீற்றிருக்கும் காமேசுவரியாகக்கண்ட மர்ம மூணர்த்தல்.

11. "என்னைநான் கண்டபடி யிப்புவியி லெல்லோருந்
தன்னையே காணத் தகுங்காணுஞ்—சொன்னேன்,
ஒளிநாட்ட மோடுமன முள்நாட்டம் பெற்று
வெளிநாட்ட மாகா விடின்."

12. ரூபநாசமானவிடத்து சங்கல்ப சொரூபத்தை யுணரப்பத்திமை
போதாமையால் பேதபாவம் நீங்காமையுணர்த்தல்.

12. "கற்பரசி ஸாவித்திரி காயமறைந் துனையடையப்
பொற்பரசி பூம்பாவை தரிசநம்நீ— கண்டிலையால்,
சொற்பமதி யாலுழன்று ஸ்வப்நசித்தர் போதிக்கும்
கற்பமதி யூகமிலாய் காண்!"

13. அபக்குவம் நீங்கிப் பரிபக்குவமாகச் சாதனமுரைத்துச் சாதிக்கு முறைமையுணர்த்தல்.

13. ஸாவித்திரி யென்பாளவள் ஸவிதாரூப மென்றுணர்நீ
காயத்ரீ தரிசநத்தாற் கண்டுகொள்வா—யுண்மையதை,

† குண்டலிநீயோக முதிர்விலுரைத்த திருப்பா இருபஃது பார்க்க.

யோகசித்தர் தன்மதியால் 'உந்மநியில்' கண்டதொரு
போகசித்தி ‡ மூக்குத்தியில் காண்!

14. அத்யாத்மயோகத்தில் சாக்ஷாத்கரித்த தாரக லக்ஷியத்தை அம்பிகாயோகத்தால் விமர்சமாக்கி பவானியோகத்தா லுண்டான போகாதிகாரசக்தியால் மூர்த்தாகாரமாய் விளங்கிய சொரூபத்திற் கலந்ததுணர்த்தல்.

14. மூக்குத்தியில் கண்டதொரு மும்மண்டல தாரகத்தை
நாக்குத்தியால் விமர்சமாக்கி நாதபிந்து—தத்துவத்தால்,
மூர்த்தமாகத் தான்கற்பித்து முன்செய்வினைப் பயன்போக்கி
தீர்த்தாகாரமா யான்புணர்ந்ததைத் தேர்.

15. அநிச்சானுசார ரூப கர்ம பெந்தத்தினால் உண்டாகும் அநுபோகத்துக்கும் சுத்தாத்துவாவில் இச்சானுசாரமாய் லபிக்கும் (நைஷ்கர்மஸித்தி) போகத்துக்கும் உள்ள வித்தியாஸ முணர்த்தல். (சுத்தாத்துவாவில் போகத்துக்குக் கர்மம் காரணமின்றி நைஷ்கர்ம சித்தியா லுண்டான மலபரிபாகமே காரணமாகையால் கர்மபெந்தமில்லை). †

15. பெற்றமக வென்றுநீ பெந்தக்கட்டுக் குட்பட்டு
கற்றமனக் கல்வியதால் கண்டதொரு காட்சிபோல்
பெற்றபெரும் பேறென்று பெந்தக்கட்டை யானறுத்து
உற்றதொரு மாபோகம் உள்ளேயுணர்.

16. புருஷார்த்தங்கள் நான்கில் வீட்டுநெறிப்பால்பற்றிப் பரனைநினைத்துப் பற்றெல்லாஞ் சுட்டீறுத்தாலன்றி சித்திகள்யாவு முத்தி தாாவென்று பரமுத்திசொரூபமுணர்த்தல்.

16. " மாகேள்வி பெற்றாலு மாயோக முற்றாலும்
தேகேந் திரியந்திரிந்தாலும்—மாகருணை,
சேரார் உபசாந்தி தேறார் பெறார்பேறு
சோராத முத்திச் சுகம்."

---

# An Appeal To Agriculturists.—1.

## வியவசாயிகளுக்கோர் அறிக்கை—1.

ஸ்வல்பமான நிலங்களுள்ள ஜனங்கள் ஐயோ! இப்பொழுது எங்களுக்கிருக்கும் நிலங்களைவிட கிஞ்சித்துக் கூட விருந்தால் குடும்ப சம்ரக்ஷணைக்குத் தேவையான மாசூல் கிடைக்குமே என்று நினைத்து அநுதாபப்படுகிறார்கள். இதற்குக் காரணம், அதிகமான மாசூலுக்குக் காரணம் பூமியின் வளமும், அதில் களையறப் பாடுபடுவதுமே ஒழிய நிலவிஸ்தீரணத்தால் அல்லவென்ற அறிவின்மையே. ஒரே ஸ்தலத்திலுள்ள அக்கம்பக்கமான இருநிலங்களில் ஒன்று ஏராளமான பலனைத் தரும்படி செழித்த பயிர்களுடன் கூடியிருக்க, மற்றது நரைத்த பயிருடன் கூடியிருக்கக் காரணமேன்? ஒன்றில் நிலக்கார

‡ மூக்குத்தியை 'நாசிகேதாக்நி' என்று சுருதிசொல்லும்.

† "ஆனந்தத்தாய்மொழி" முதலாவது 'வித்தைப்படலத்தில், 13-வது திடவார்த்தை' என்பதுமுதல், 24-வது அருட்பேறு, 25-அருளானந்தம் வரையில்பார்க்க. அந்துவா என்றால் மார்க்கம்.

ணது பாடு அதிகம், மற்றதில் குறைவு, என்பது கரதலா மலகம்போல் விளங்க வில்லையோ! "பூமி மெய் வருந்தக் கூலிதரும்" என்ற பழமொழியும் மறக்கத் தக்கதோ! விவசாயிகாள்! தற்காலத்தில்நமது தேசத்திலுள்ள பஞ்சத்திற்குக் காரணம் யாது? உணர்விற்கு வேண்டிய மாசூலைத் தரத்தக்க நிலங்கள் இல்லையென்பதால் அல்ல அனேகர் பஞ்சத்தால் மடிவது! விவஸாயிகளில் பெரும்பாலோர் "செடிகொடிகள் எப்படி வளருகின்றன? அவைகளின் உணர்வு எது? நாம் எவ்வாறு செய்தால் நமது நிலங்களினின்று எவ்வளவு மாசூலை அடையக் கூடலாமோ அவ்வளவையும் அடையலாம்" என்ற தெளிவான சாஸ்திர ஆராய்ச்சியின் அனுபவ மில்லாமலிருப்பதே மேற்கூறிய குறைக்குக் காரணமென்பது திண்ணம். நிலத்தில் உழைத்து, எருபோட்டுக், களை பிடுங்கி சுத்தமாய் வைத்திருப்பதே முதல் முதல் எல்லா விவஸாயிகளும் கவனிக்கவேண்டிய விஷயம்.

களை.

களை எப்பொழுதுமே நிலத்திற்குக் கெடுதலைத் தருவதென்று எண்ணுவது தப்பான அபிப்பிராயம். மாசூல் அறுவடையானதும், நிலத்திலுள்ள நுட்பமான களைகளை அவைகள் விதைபிடிக்குமுன் கொத்தித்தள்ளி நிலத்தில் மடியச்செய்வது நிலத்தின் வளத்தை விருத்தி செய்யும். களை கெடுதி உண்டாக்குவ தெல்லாம் கூடி பூமியிலுள்ள சாரத்தின் பெரும் பாகத்தைத்தான் எடுத்துக்கொண்டு பயிர்களின் உணர்வைக்குறைக்கிறதென்பதே தவிர வேறொன்றுமில்லை யென்பது மறக்கத்தக்க தல்ல. ஆகையால் நிலங்களில் பயிருள்ளபொழுது களைபிடுங்கி அறுவடை யானதும் பிடுங்கின களைகளை நிலத்திலேயே மடியச்செய்வது மிகவும் நல்லது.

சில ராஜாங்கங்களில், சர்க்காரார் பாடுபட்டுப் பயிர் செய்யாதவர்களிட மிருந்து நிலத்தைப் பிடுங்கியும், பாடுபட்டுப் பயிர் செய்பவர்களது நிலங்களை அதிகப்படுத்தியும் செய்து வந்ததின் காரணம், மேற்படி தேசங்களில் பயிரிடத்தக்க நிலங்களின் விஸ்திரணக்குறைவும், விவஸாய விருத்தியில் சர்க்காரின் நோக்கமுமே.

வியவசாயிகள் தெரிந்துகொள்ளவேண்டிய விஷயங்கள்.

தமது நிலங்களிலிருந்து அடையக்கூடிய மாசூலை அடையவியவசாயிகள் தெரிந்துகொள்ளவேண்டிய இன்றியமையாத விஷயங்கள்:—

(1) பூமி எப்படி ஆனது, அதிலடங்கி யிருப்பன எவை செடிகள்வளர்வதற்கு அது எவ்விதமாய் உதவி செய்வது, எவைஎவை அடங்கியுள்ளநிலம் எந்தெந்த செடிகளின் வளர்விற்கு ஏற்றது என்பதும்,

(2) வித்தென்பதெது? அதுமுளைப்ப தெப்படி? செடி, கொடி, மரங்களை வித்தினின்றும் பதியன்களினின்றும் எப்படி பயிர்செய்து மாசூல் உண்டாக்குவது? எந்தெந்த செடிகளுக்கு எவ்வெவ்விதமான உணர்வுதேவை? என்றுதெரிந்து அதற்கேற்ற பூமியில் அதிகமாய் இராத வஸ்துக்கள் உள்ள எருவைப் போடுதல், பயிர்களைக் கெடுக்கும் களைகளைப் பிடுங்கி, அவைகளுக்குத் தீங்கிழைக்கும் பூச்சிபுழுக்களை எப்படி அகற்றுவது என்ற அறிவு முதலியனவும்,

(3) செடி கொடி மரங்களின் வெவ்வேறுபாகங்களும், அவைகளின் அமைப்பும், நமது சரீரத்தின் இந்திரியங்கள் அவயவங்கள் இவைகளது உபயோகம் போன்ற, செடி கொடி மரங்களின் வளர்விற்கும் விருத்திக்கும் ஆதாரமும் அனுகூலமுமான உபயோகங்கள் எவையென்ற தெளிவான அறிவுமே.

நிலவளம்.

அநேக ஆண்டுகளாக மழை, காற்று, பனிமுதலியவைகளால் பொடிக்கப்பட்ட பாறைகளாலும், புற்பூண்டுகள், செடிகொடிகள் புழுப்பூச்சி மிருகங்கள் முதலியன மடிந்துமக்கினதினாலும், நானுவித உலோகங்களின்ரேணுக்களின் சேர்க்கையினாலும் சேர்ந்து ஆயிருப்பதைத்தான் நாம் நிலமென்கிறோம். இவைகளை நாம் இருபெரும் பாகமாய்ப் பிரிக்கலாம் ஒன்று உயிருடன் கூடிய செடிகொடிகளின் மக்கிப்போன பொடிகள். மற்றொன்று உயிரில்லாமல் பாறைகள் பொடிக்கப் பட்டதால் ஆன ரேணுக்கள். செடிகொடிகள் வளர்வதற்கு இவ்விரண்டுவித சத்துக்களும் அவசியம். நிலத்தைப்பரிசோதித்து இன்னின்ன செடிகளுக்கு எவ்வெவ்வித உணர்வுகள் வேண்டுமென்ற அறிவினால் இல்லாதவைகளை பூமிக்கு எருவாகப் போடுவதனால் நாம் பூரணமான மாசூலை அடையக் கூடும். நம்மனோர் இவ்வித அறிவில்லாமல் பூமியில் ஏராளமான சத்துக்கள் போன்ற சத்துள்ள எருவையே திருப்பப் போட்டும் சரியான மாசூலை அடைய முடியாததால் வருத்த முறுகிறார். பயிருக்குவேண்டிய, பூமியில் அதிகமாக விராத சத்துக்களுள்ள எரு

போட்டுப் பயிர்செய்தால் அவர்கள் அவ்வாறுவருத்த முறக் காரணமிராது.

செடிகொடி, மரங்கள் வளர்வதற்குப்பூமிஎங்ஙனம் உதவிபுரிவதெனில், அவைகளின் வேர்கள் தங்குவதற்கும், அப்படித்தங்குவதால் மேற்படிசெடி கொடி மரங்கள் உறுதியாய்நிற்க ஹேதுவாவதன்னியில் அவைகளுக்கு வேண்டிய உணவுகளையும் அது அடக்கிக்கொண்டிருக்கிறதல்லவோ! இவ்விதஅறிவு தெளிவாய் மனத்தில் இருக்கின், வேரூன்றி செடிகொடிகள் உறுதியாய்நிற்க நிலத்தை எவ்விதம் கொத்தி உழவேண்டுமென்பது, பயிர் செய்யவேண்டிய பயிர்களின் இயற்கை ஸ்வபாவ அறிவினால் நன்குவிளங்கி புத்திசாலித்தனமாய் சாகுபடி செய்ய அனுகூலமாகுமல்லவா. ஆகையினால் நன்றாக சாகுபடிசெய்து பூர்த்தியான மாசூலைஅடைய பூமி சம்பந்தப்பட்ட மாத்திரம் நாம் முக்கியமாய் அறிந்து மனத்தில் கவனமாய் வைக்கவேண்டியது. பூமி செடி கொடி விருக்ஷங்களுக்கு வேண்டிய உணர்வுகளின் சேர்க்கையென்றும், எவ்வெவ்வித செடிகளுக்கு வேண்டிய இயற்கையான உணவு எந்தெந்தபூமியில் இல்லையோ அந்தப் பூமியில் அவ்வித செடிகள் நன்கு வளராதென்பதும், பயிரிடப்பட்டுள்ள பூமியில் களைகளை வளரவிட்டிருப்பதால் பயிர்களுக்குவேண்டிய உணவு களைகளால் எடுத்துக்கொள்ளப்பட்டு பயிர்கள் உணர்வின் குறைவினால் க்ஷீணதிசையை அடைந்து சகுதியான பலனைத் தராதென்பதே முக்கியமானது.

### வித்து.

வித்தென்பது வளரக்கூடிய செடி கொடி மரங்களின் அதி நுட்பமான ஸ்வரூபத்தையும், வித்து பூமியில் போடப்பட்டு வேரூன்றி அதினின்றும் உணவை உட்கொள்ளும் வரையில் ஜீவித்திருக்க வேண்டிய வஸ்துக்களையும் ஒருகடினமான போர்வைக்குள் அடக்கிக்கொண்டிருப்பதே. ஆதலின் நல்ல வித்தினின்று உண்டாக்கப்படும் நாற்றுக்கள் பலத்துடன் கூடியிருப்பதால் வேர் ஊன்றினதும் பூமியினின்றும் அதிகமான உணவை உட்கொள்ள சக்தியுள்ளதாகஆகி ஏராளமான மாசூலுக்கு ஹேதுவாக ஆகிறது. வித்து கெடுதலாக விருக்கின் நாற்று பலஹீனமுள்ளதாக ஆவதால் அதன்வேர் அதிகமான உணவை பூமியினின்றும் கிரஹிக்கச் சக்தியற்று அல்பமான மாசூலையடைய ஹேதுவாகிறது. ஆதலின் பயிர்செய்ய வித்துக்கள் மிகவும் நன்றாக விருத்தல் வேண்டுமென்பது அத்தியாவசியம். இது விஷயத்தில் முக்கியமாய்க் கவனிக்க வேண்டியது எவ்வளவுகாலத்திற்குப்பிறகுதான் வித்து பூமியில் போடப்படவேண்டுமென்பதும், இக்காலம்செடிகொடி மரங்களைப் பொறுத்திருக்கிறதென்பதுமே. சில வித்துக்கள் ஒரு வருஷத்திற்குள்ளும் சில ஒருவருஷத்திற்கு மேற்பட்டும் நானாவிதமாக பூமியில் பயிர்செய்யப்படவேண்டியிருக்கும். சிலவித்துக்கள் பூமியில்ஆழமாய்ப் போடப்பட்டால்தான் முளைக்கும். சில மேலாகப் போடப்பட்டால் முளைக்கும், ஆழத்தில் போடப்பட்டால் முளைக்காது. சிலதிற்கு அதிக வெளிச்சம் கூடாது: இதற்காக விதைவிதைத்த பாத்தியில் தழை, வைக்கோல் முதலியவைகளால் மூடி வைக்கவேண்டும். சிலதிற்கு அதிகவெளிச்சம் தேவை. ஆதலின், செடி மரம் முதலானவைகளின் கீழ் பாத்தி உண்டாக்கி விதைக்கப்படின் நன்கு வளரா. இவைகளையெல்லாம் பொறுமையான அனுபவத்தால் கண்டறிந்துதான் தெரிந்து கொள்ளல் நன்று.

### பதியன்கள்போட்டுப் பயிர்செய்தல்.

பதியன்கள்போட்டுப் பயிர்செய்தால் புதிதாகச் செடிஉண்டாக்குவதன்று. தாய்ச்செடியின் இயல்போடுகூடிய அச்செடியின் ஒருபாகம் போன்றதே ஒழிய, வித்தினின்று உண்டாக்கப்படுவனவற்றைப்போல் வேறானதல்லவென்போர் பலர். இதுவும் வாஸ்தவமே. ஏனெனின், வித்தினின்றும், பதியனினின்றும் பயிர் செய்யக்கூடிய எலுமிச்சை போன்ற செடிகள் பதியன்போடப்பட்ட செடி, வித்தினின்று உண்டானதைக் காட்டிலும் அதிசீக்கிரத்தில் பலன்தருவதை நாம் பார்த்திருக்கிறோமல்லவா! செடியிலேயேபோடப்படாமல் வெட்டிக் கொண்டுபோய்ப்போடப்படும் பதியன்கள் அதிககால தாமதம் இல்லாமலும்ஒருகணுவிற்குக் கீழாக ஒழுங்காய் வெட்டப்பட்டும் போடப்படவேண்டும். வெட்டுவதற்கு அதிகூர்மையான கத்தியிருத்தல்வேண்டும். ஏனெனின் மழுங்கலான கத்தியினால் வெட்டப்படின் வெட்டுப்புறம் ஒழுங்காய் இராததும்தவிர பட்டையும் வழுவுண்டுபோகுதல் கூடும். நமதுசரீரத்திலும் கூட கூரான கத்தியால் உண்டான காயம் மழுங்கலான கத்தியாலானதைவிட சீக்கிரம் ஆறிப்போவதை நாம் பார்த்திருப்பதால், பதியனிலும் முளைகள் ஒழுங்காய்வெட்டப் பட்டிருக்கின் அவைகள் கூடுவது

சீக்கிரத்தில் ஆகி, வேர் சீக்கிர மூன்றித் தளிர்களும் சீக்கிரம்விடும். பதியன் போடப்படுமிடம் ஈரமாயும் மணற்பாங்காயு மிருத்தல் வேண்டும். கட்டுச்செடி உண்டாக்குவதும் ஒருவிதபதியன் போடுதலே. இதஞல் செடிகள் நன்ருகவிருந்தும் சிலாக்கியமற்ற பலனைத் தரும்படிசெய்தல் இயலும்.

### எருவகை.

செடிகளுக்கு உணவாக பூமியில் போடப்படும் எருக்கள் பலவகை. ஒன்று செடிகளுக்கு வேண்டிய உலோகசம்பந்தமானவைபூமியில்இல்லாவிடில் அதைத்தயார்செய்து போடுதல்;மற்றது செடி கொடி தானியம் முதலியனவைகளைக்கால்நடைகள் தின்று ஜீரணமாகாதவைகளைச் சாணியாய்த் தள்ள அதை எருவாக உபயோகிப்பது; கால்நடைகளின் சாணி மூத்திரம் முதலானதும் காய்ந்த தழைமுதலிய குப்பைகூளங்களும் ஒன்ருகப்போட்டுச் சேர்த்து வைக்கப்பட்டு எருவாய் உபயோகிப்பது. கால்நடைகளின் சாணி மூத்திரம் முதலிய பூமியில் சுவறி வீணுக்கப்படாமல் வைக்கோல் முதலியவைகளைப் பரப்பி அவற்றின் மேல் கால்நடைகளைக் கட்டி, சாணி மூத்திரம் முதலியவைகளால் ஊறிக் கலந்துள்ள அவ்வைக்கோல் முதலானவைகளை எருவாய்உபயோகித்தல். பச்சைத் தழைகளை ஒடித்து நிலத்தில்போட்டு அழுகும்படி விட்டிருப்பது. செடிகொடி புற்பூண்டு பிராணிகள் முதலியன எரிக்கப்படின் அச்சாம்பலை எருவாக உபயோகித்தல், சுண்ணும்பை ஐந்தாறு வருஷங்களுக் கொருதரம் கணக்காக நிலத்தில் சிறுசிறு மூட்டு மூட்டாய்க் கொட்டி மூடிவைத்து மேலாக உழுது விடுவது. அன்னபேதி முதலான சிற்சிலவைகளை ஜலத்தில் கரைத்து செடிகளுக்குஊற்றுவது அவைகளின்மேல் தெளிப்பது முதலியன.

### விக்கினங்கள்.

ஜகத்தில் ஒவ்வொரு விருத்தி அம்சத்திற்கும் அப்பியந்தரம் பலஉள. இவ்வாறே தோட்டப் பயிர்களின் விருத்திக்கும் பல இடையூறுகள் உண்டு. முக்கியமாய் பூண்டு, களைகளிஞல் உண்டாகும் கெடுதி அதிகம். நாம் ஏராளமாய் பணச்செலவுசெய்து குழிவெட்டி கிடங்கறுத்து எருப்போட்டு பாடுபட்டதெல்லாம் களைபிடுங்கப்படாவிடில் விழலுக்கிறைத்த நீர்போலாகும். எப்படியென்ருல் களைகள் கொள்ளை கொள்வது பூமியிலுள்ள உலோகஉணவுகள் மாத்திரமன்று, இன்னம் பூமியிலுள்ள இதர சாரங்களையெல்லாம் கிரஹித்துக்கொண்டு பயிர்களுக்கு உயிரின் ஆதாரமாகிய நைப்பைக்குறைப்பதுடன், அவைகளைச் செழுமையாய் வளர வொட்டாமல் செய்கின்றன. நிலங்களினின்றும் களைகள் கிரஹித்துக் கொள்ளும் சாராம்சங்களைக் கணக்கிட்டுப் பார்க்கின் அதன் ஏராளம் நன்கு விளங்கும். ஆதலின் உலகில் ஒருவன் தன்ஞல் எவ்வளவுபூமி நன்குபராமரித்து களையின்றி சுத்தமாய் வைத்துக்கொள்ள முடியுமோ அதற்கு மேல் வைத்துக் கொள்ளுதல் தக்கதன்று. களைகளன்றியில் பயிர்களுக்கு சத்துரு அநேகவித புழுப் பூச்சி வண்டு முதலியன. இவைகள் செடிகளின் துளிர் இலை முதலியனவைகளைத் தின்னும், வெட்டியும், இலை தளிர்களின்மேல் முட்டைகளை இட்டும் நாசம் பண்ணுகின்றன. இக்கெடுதி செய்யும் பூச்சி முதலியவைகளை நாசப்படுத்தும் குருவி முதலானவைகள் பல. இவைகளைப் பயப்படுத்தித்துரத்திவிடாமல் தோட்டங்களில் யதேச்சையாய் சஞ்சரிக்கவிடுதலால் மேற்கூறிய கெடுதி சொஞ்சம் குறைவு படலாம்.

### "வரப்புயர" எனும் வாழ்த்து.

ஔவையார் ஒருதரம் ஒருகிராமத்திற்குப்போக ஊரார் எதிர்கொண்டு சென்று கிராமத்துககு அழைத்து வருகையில் ஒரு வரப்பின்மேல் இவ்வரப்புயர! என்று ஆசியாய்ச் சொல்லி உட்கார்ந்த அவ்வம்மணியை நோக்கி அவ்வார்த்தையின் தாற்பரியத்தைக் கேட்க, அவளும் வரப்புயர்ந்தால் நீர் உயரும், நீர் உயர்ந்தால் நெல் உயரும், நெல் உயர்ந்தால் குடி உயரும், குடி உயர்ந்தால் முடிஉயரும் என்று வியவகரித்ததாகக் கேள்விப்பட்டிருக்கிருேம். ஆதலின்நம்மில் ஒவ்வொருவரும் தான் செழித்தால் போதுமென்ற சுயநயமான எண்ணத்தை விட்டு நாடு செழித்து க்ஷேமத்தை அடைந்தால் நமக்கும் க்ஷேமமென்ற திவ்விய சங்கல்பத்தில் ஆழ்ந்தநோக்கமுள்ளவர்களாய் ஜாஸ்தியான நிலமுள்ளோர்கள் தமக்கிருக்கும் நிலவிஸ்தீரணத்தால் ஸ்வல்பமான மாசூல்கிடைத்தாலும் போதுமென்ற எண்ணத்தைவிட்டு தன் தன் நிலங்களி லிருந்து எவ்வளவு மாசூலை அடையலாமோ அவ்வளவு மாசூலை அடையாமல் அஜாக்கிரதையாய் கிடைத்தது போதுமென்றிருப்பது உலகத்தில் க்ஷாம முதலானவைகளுக்குத் தங்களா லியன்ற உதவி புரிவதாக ஆகும் என்று அறிந்து அப்படிக்கில்லாமல் பூமியை வளமாகச் செய்து இயன்ற எருக்

கள் போட்டு கூடுமான பலனை அடைய முயலுவது நாட்டுக்குப்பஞ்சம், பிணி முலியவைகளை நீக்கி க்ஷேமத்தைத் தரும் என்றதை மனதில் வைக்க வேண்டியது அத்தியாவசியம். வெகு நாட்களுக்கு முன் பயிர் செய்வோர்களுக்குத் தான் மிக்கமரியாதை, சர்க்காராலும், இன்னம் மற்றவர்களாலும் செய்யப்பட்டுவந்ததாம். ஏனெனில் ஒருவன் எவ்வளவு பணக்காரனாயிருந்தாலும் அவன் தன்பணத்தைத் தின்று ஜீவிக்கலாகுமா? குடியானவர்களது பிரயாசத்தால் உண்டாக்கப்பட்ட தானியம், காய்கறி முதலியவைகள் இல்லாமல் அவர்கள் ஒரு நாள் ஜீவிக்க முடியுமா? முடியாதல்லவா! இதைத் தெளிவாகக்காட்ட ஓர் சிறுகதையுண்டு. விஷயம் விரிந்துவிட்டதால் அதை அடுத்த சஞ்சிகையில் சொல்வோம்.

எம். என். கணேசய்யர்.

SIVAYOGA DEEPIKA—II.

## சிவயோக தீபிகையில் பாகிய சதுரங்க பூசாவிதானமென்ற இரண்டாவது படலம்.

1. (ஸ்ரீ குருமூர்த்தியானவர் அந்தர[illegible] பூஜாவிதானத்தைச் சொல்லி சிஷ்யனை ய[illegible]த்து) இந்த சிவபூஜாவிதியானது பெரியோர்[illegible]ளாலே வேறொரு பிரகாரமாகிய யோகமார்க்[illegible] கோசரமாகச் சொல்லப்படிருக்கின்றது. அதை நானுனக்குச் சொல்லுகிறேன் (கேளென்று சொல்லத்தொடங்கினர்).

2. ஓ சிஷ்யனே! யோகத்தால் ஞானமும், ஞானத்தால் யோகமும் பிறக்கும். இவ்விரண்டும் சித்திப்பதற்காக பூமியிலே பூதசரீரத்தைக் காப்பாற்றவேண்டும்.

3. தேகத்தைக் காப்பாற்றுவ தெவ்வாறென்னில் சிலேஷ்மம் நாசமானால் சரீரம்ஸ்திரமாவது நிச்சயம். அது அழிவதெப்படி யென்னில் ஹடயோகத்திலழியும் (என்றால் வாயு கும்பகத்தில் ஸ்திரமானால் சிலேஷ்ம மழியும். வாயுவைக்கட்டாமல் சிலேஷ்மத்தை யழிக்கக் கூடாது; ஆகையால் வாயு தாரணையினாலே சிலேஷ்ம நாசம் பண்ணி தேகத்தை நிறுத்திக் கொள்ள வேண்டுமென்றவாறு).

4. யோக சாதகம் செய்கின்றவர்களுக்கு சாதிக்கவேண்டியது சிவயோகமே யாகும். அதற்குச் சாதனம்ஹடயோகமாகும். ஆதலால் முதல் ஹடயோகத்தைச் சாதிக்கவேண்டியது. அதற்கு எட்டு அங்கங்களுண்டு. (அவை பாஹ்ய சதுரங்கமென்றும், அந்தர சதுரங்கமென்றும் இரு வகையாகப் பிரிக்கப்படும்). அந்த ஹடயோகத்தைச் சாதிக்க முதல் இயம நியமாதி அஷ்டாங்கங் களினாலே சிவபூஜை செய்யவேண்டும்.

5. (அப்பூஜையாவது யம, நியம குணங்களாலே ஆத்ம சுத்தி பண்ணி, தன் வசமான பலவித ஆசனங்களி லொன்றில் ஸ்திரமாக விருந்துகொண்டு, பிராணாயாம மென்கிற ஜலத்திலே [illegible] அபிஷேகம் செய்ய வேண்டும் [illegible] ஆகான் [illegible]

6. அந்தப் [illegible] இந்திய நிக்கிரகமே [illegible]கமும், [illegible]னமே [illegible]ஷ்டமம், த[illegible]மனாதாரனையே [illegible] சமாதியே [illegible] நைவேத்திய[illegible] யது. இந்த நான்கும் அந்தர சதுரங்க விதானமெனப்படும்.

7. இந்தப் பிரகாரம் அஷ்டாங்கயோக மார்க்கத்தினாலே எப்பொழுதும் ஹிருதயகமலத்தில் பரமேசுவரனைப் பூஜிக்கவேண்டும். பாஹ்ய பூஜையினால் என்ன பிரயோஜனம்?

8. இந்தப் பிரகாரம் அந்தரங்கத்திலே அஷ்டாங்க யோகமார்க்கத்தினால் அவ்வியயனை சிவனை எவன் பூஜிப்பானோ அவனே சைவன், அவனே வித்வான் அவனே யோகமறிந்தவருள் உத்தமனுவான்.

9. (1) பிரஹ்மசரியம் (ஸ்திரீ சங்கமின்மை), (2) (தேகத்துக்கனுகுணமான) மிதமான

ஆகாரம், (3) தைர்யம், (4) பூததயை, (5) சத்தியவசனம், (6) நேர்மையானபுத்தி, (7) சுசியாசாரம், (8) பொறுமை, (9) களவின்மை (10) ஹிம்ஸைபண்ணுதிருத்தல் ஆகிய இப்பத்தும் இயமங்க ளென்று பெரியோர்களால் சொல்லப்படும்.

10. (1) (எப்பொழுதும்) சந்தோஷம், (2) சம்பூரணபாவனை, † (3) நல்ல புத்தி, (4) தபசு, (5) விரதம், (6) சிவபூஜை, (7) ஜெபம், (8) நிஷ்டை; (9) சத்பாத்திரத்தில் தானம் செய்தல், (10) இருதயசுத்தி ஆகிய பத்தும் நியமங்க ளென்று சொல்லப்படும்.

11. இந்தப்பிரகாரம் இயமங்கள் பத்து, நியமங்கள் பத்து ஆக இருபது லக்ஷணங்களினாலேயும் ஸ்திரமான புத்தியோடுகூடி ஆத்மசுத்தி பண்ணவேண்டும்.

12. ஆசனங்களி லனேகமுண்டு. அவற்றுள், சித்தாசனம், பத்மாசனம், ஸ்வஸ்திகாசனம், முக்தாசனம், வீராசனம், பத்திராசனம், கருடாசனம், சிங்காசனம், கோமுகாசனம், சுகர்சனமென்னும், இப் பத்தாசனங்களுமே சிரேஷ்டமானவை.

13. கிரஹஸ்தர்களுக்கு பத்மாசனம் சிரேஷ்டம். மற்ற யோகிகளுக்கு சித்தாசனம் சிரேஷ்டம். சகலமானபேர்களுக்கும் சுகாசனம் சிரேஷ்டமாகும். இம் மூன்றுமே சிரேஷ்டமாகும்.

14. பிரசித்தமான ஆசனங்க ளநேகங்களில் எவை தனக்குச் சரியாய் இஷ்டமாயிருக்குமோ அவற்று ளோராசனத்திலிருந்து கொண்டு ஏகாந்த ஸ்தானத்தை யாசிரயிக்க வேண்டும்.

15. அந்த யேகாந்த ஸ்தலத்திலொரு அழகியமடத்தைக் கற்பிக்கவேண்டும். எப்படியென்றால் (ஓரிடத்திலேயும் வெளியில்லாமல்) குறுகியவாசலுள்ளதாகவும், சுற்றுப்பிராகாரத்தால் சூழப்பட்டதாயும், மிகபரிசுத்தமாகவும், வெளியிற் கூடமுள்ள தாகவும்,

16. நல்ல வாசனையுள்ள புஷ்பங்களால் நிறைந்ததாகவும், விதானத்தால் (கட்டிலால்) சோபிக்கப்பட்டதாகவும், மிருதுவான மெத்தை படுக்கை ஆசனம் இவற்றோடு கூடினதாகவும்,

17. (சாம்பிராணி முதலிய) தூபத்தால் வாசனையுள்ள தாகவும், பசுவின் சாணம் கொண்டு மெழுகப் பட்டதாகவும், சமித்து, புஷ்பம், பத்திரம் (இலைகள்) இவைகளோடும், கந்தமூல பலங்களோடும் கூடினதாகவும்,

18. விபூதி, ருத்திராக்ஷம், தெர்ப்பை, கிருஷ்ணாஜினம் இவற்றா லலங்கரிக்கப்பட்டும், சுத்தமான அன்ன பானங்களால் நிறைந்து, சகல மூலிகைகளாலும் சம்பூர்ண மானதுமாக (அம்மடம் அட்டப்பட் டிருக்கவேண்டும்).

19. அப்படிக் கொத்த மனோகரமான மடத்தில் எப்பொழுது மிருந்துகொண்டு நியதமான மனதோடு கூடினவனாய் தன் ஹ்ருதயத்தில் சதாசிவலிங்க மூர்த்தியை நன்றாகப் பூஜிக்க வேண்டும்.

20. அப்பூஜாவிதி யெப்படியெனில் ஓ வித்வானான சிஷ்யனே கேளாய்! ஆதியில் கேவலகும்பகத்தில் வாயுவை நிரோதம்பண்ணி பிராணாயாமமென்கிற ஜலத்தினால் சித்பிரகாசரான சிவமூர்த்தியை அபிஷேகம் செய்யவேண்டும்.

21. பிராணாயாம மாவது பிராகிருதமென்றும் வைகிருத மென்றும் இரு விதமாகும். இவை இரண்டுமெல்லாமல் நின்றது கேவலகும்பகமாகும்.

22. அவைகளில் பிராகிருதப் பிராணாயாம மாவது, பிராணவாயுவு நிஸ்வாச உச்சுவாசரூப

† மூலத்தில் ஆஸ்திக்கியமென்கிற வார்த்தை காணப்படுகிறது.

மாய் ஸ்வபாவமாகவே போக்கு வரத்தா யிருப்பது. இது சகல ஜீனங்களுக்கும் நடக்கின்றது.

23. வைகிருதப்பிராணயாமமாவது, சாஸ்திரங்களிற் சொன்ன விதிப்படி ரேசகபூரக கும்பகங்களின் கிரமமறிந்து வாயுவை நிறுத்துதல்.

24. இந்தப் பிராகிருதம் வைகிருதம் என்கிற இரண்டும் எந்த மகாத்மாவுக்கு க்ஷண மாத்திரத்திலே சித்தியாமோ அதுவே கேவல கும்பக மென்று சொல்லப்படும். (ஏனென்றால் நினைத்த மாத்திரத்தில் பிராணவாயுவை மனத்தோடு கூட்டிப் போக்குவரத்தில்லாமல் நிலைநிறுத்துதலா லென்றறிக).

25. முன் சொல்லப்பட்ட பிராகிருதமானது அஜபா ரூபமான மந்திரயோகமாகும். இரண்டாவதான வைகிருதமானது (தன் யத்தினத்தால் வாயுவை நிறுத்துகிறபடியால் லய யோகமாகும். மூன்றாவதான கேவலகும்பகம் (வாயு மனதோடு கூடி ஸ்திரமாய் நிற்கின்றபடியால்) ஹடயோகமாகும். (அவைகளை அதிக்கிரமித்தது) அமநஸ்கம். அதுவே ராஜயோக மென்று சொல்லப்படும்.

26. முந்தினது அஜபாயோகம், இரண்டாவது வாயு நாதத்தில் லயமாகும் லயயோகம். மூன்றாவது மனதும் வாயுவும் ஒன்றாய் ஸ்திரப்படுவது ஹடயோகம். (இவைகளுக் கெல்லாம் மேலானதாம்) நாலாவதான ராஜயோகம் விருத்திக ளில்லாம லிருப்பது.

27. பிராணயாமத்தினுமேலே இந் நான்கு வித யோகங்களுஞ் சித்திக்கும். [illegible]யால் அப்பியாச சூரனை நீயும் பிரா[illegible]த்தை முக்கியமா யநுஷ்டிப்பாயாக.

28. (அப்பிராணயாமத்தில் [illegible] மானது பிந்துவுடன் கூடின ஸகா[illegible] பீஜாக்ஷரமானது உச்சுவாச ரூபமாய் [illegible]படும்; இரண்டு பிந்துக்களுடன் கூடிய ஷகாராந்தமான பீஜாக்ஷரம் நிஶ்வாச ரூபமாய் உள் பிரவேசிக்கும். ‡

29. இந்தப்படி பிராணவாயு சகலமான பேர்களுக்கும் போக்குவரத் துள்ளதாயிருக்கும். இப்படி நாள்தோறும் செய்யப்படும் [பிராணயாமயோகமே] அஜபாகாயத்ரீ மந்திரஜெப மென்று சொல்லப்படும்.

30. யாதாமொருவன் அருணோதய காலத்தில் குரு உபதேசித்த மார்க்கமாக இந்த அஜபா காயத்திரீ மந்திரத்தை அஹோராத்திரம் 21,600 சங்கியையாக ஜபம்பண்ணுவானே அவன் அஜபாமந்திர ஜபபலத்தை யடைவான்.

31. இப்படி அஜபாமந்திரத்தை ஸங்கல்பஞ்செய்து ஜபம்பண்ணுபவன் சகலபாபங்களினின்றும் நீங்கி சீக்கிரமாகவே சிவயோகசித்தியை யடைவான். சந்தேகமில்லை.

32. [இந்த அஜபாகாயத்ரீ மந்திரத்தை அருணோதய காலத்தில் நியமமாக விருந்துகொண்டு சாஸ்திரப்பிரகாரம் ஸங்கல்பம் பண்ணி உச்சுவாச நிஸ்வாசம் 21,600-ம் (மூல) ஆதாரமுதற்கொண்டு சஹஸ்ரதள கமலபரியந்தமான சப்தமண்டல தேவதைகளான கணேசுவரர், பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் சிவன், பரமாத்மா, ஸ்ரீசற்குரு வென்கிற சப்த தேவதைகளுக்கும் அவரவர்கட்குச் சொன்ன சங்கியைப்பிரகாரமாக சமர்ப்பணம்பண்ணி அஜபாமந்திரத்தை மநோதிருஷ்டியினால் பார்க்கவேண்டும்]. அந்த அஜபாகாயத்ரீ மந்திர பீஜங்க ளிரண்டும் த்ரிவேணி சங்கமஸ்தலத்தில் [illegible]னால் அப்தப்பிரஹ்ம ரூபமான [illegible]ரணவ[illegible] பிரகாசிக்கும்.

‡ [illegible] என்பது ஸகாரத்திற்குப் பின் வரு[illegible] "ஹ"காரத்தைக் குறிக்கவே "ஹம்" [illegible]ஜம் சித்திக்கும். ஷகாராந்தமான அக்ஷரம் [illegible] "ஸ:" என்கிற பீஜம் நிஶ்வாச[illegible]ப்படுகின்றது. இதன் விரிவை ஹம்ஸோபநிஷத்தில் பார்க்கலாம். [இந்த உபநிஷத் அடுத்த சஞ்சி[illegible]யில் பிரசுரிக்கப்படும். வி. சி. பர்.]

33. ஆத்மமந்திரத்தை (ஹம்ஸமந்திரத்தை) ஸோஹம் எனச்செய்து அப்பதத்திலுள்ள இரண்டு எழுத்துகளையும் வியக்தமாகச்செய்து அவ்வெழுத்துக்களிலுள்ள மெய்யெழுத்துப் பாகத்தைத் தள்ளி யெழுத அது திவ்வியமான ஓம்காரமந்திரமாகும். சகல மந்திரங்களுக்கும் மேலான இதை அநுஸ்வாரத்தோடு சேர்த்து எவன் பிரஹ்மநாடியில் சேர்ப்பானோ அவன் பூரணாநந்தனாய் குண்டலினி (யோக) அனுபவத்தில் தேர்ந்தவனாவான், [ † "கர்மணே மூர்த்திமேதி"—(ஷட்)கர்மா சக்தியின்பொருட்டு(பிரணவ மந்திரோபாசனை செய்கிறவன்) மூர்த்தி (தாரகம்) என்னும் பூர்வ யோக சித்தியை (இந்திரியாந்தத்தை) அடைகிறான்.]

[குறிப்பு:—ஸோஹம் என்பதில் மெய்யெழுத்துகளான ஸ, ஹ இரண்டையும் தள்ள ஓம்எனநிற்கும். எப்படிநாம் ஜீவமந்திரமாகிய ஸோஹம் என்பதின் உபாதிகளான மெய்யெழுத்துக்களைத்தள்ள உபாதியற்ற உயிர்ரூபமான பிரணவம் நிற்குமோ அவ்விதம் ஜீவோபாதிகளை நீக்கிப்பார்க்க பரமாத்மாவே மிஞ்சி நிற்கும் எனப்பொருள்.]

34. வாமகதியான இடாநாடி சந்திரனென்று சொல்லப்படும். அதுவே யமுனா நதி. தக்ஷிண கதியான பிங்களாநாடி சூரியனென்று சொல்லப்படும். அதுவே கங்காநதி.—மத்திய கதியான சுஷும்னாநாடி அக்னியென்று சொல்லப்படும். அதுவே சரஸ்வதி நதி. இந்த மூன்றும்கூடின ஸ்தான மெதுவோ அதுவே த்ரிவேணீசங்கம மேன்றும், த்ரிகூட மென்றும் சொல்லப்படும்.

35-36. [அந்த ஸ்தானமான தெதுவென்னில், கர்ணேந்திரியங்க ளிரண்டும் நாசிகாவிந்திரியங்க ளிரண்டும் எங்கே கூடியிருக்குமோ அந்தஸ்தலம்.] அந்தஇடத்தையே சதுஷ்பீடமென்றும் ஸ்ருங்காடகமென்றும்சொல்லப்படும். ஆகையால் அந்த ஒருஸ்தானத்திற்கே த்ரிகூட மென்றும் த்ரிவேணிசங்கம மென்றும் சதுஷ்பீட மென்றும், ஸ்ருங்காடக மென்றும் பெயர்.

37. உச்சுவாச நிசுவாஸ ரூபமான வாயுவை மனதோடு த்ரிகூட ஸ்தலத்திலே சேர்த்து ஸ்திரப்படுத்தி அதன்மேல் த்ரிகோண (வெளியாகிற) சுஷும்னா நாடி மார்க்கத்திலே பிரவேசிக்கப் பண்ணவும்.

38. அப்படிக் கொத்த பிராணவயு உயர (வெளியில்) நடக்கிற கதியை நிறுத்தினால், ஊர்த்துவ சூக்ஷ்மசக்தி நிபாதமாம். அந்தப்பிராணவாயு பிரத்தியாகதமாய்த் திரும்பி (அதைக் கீழேநடப்பித்தால் மத்தியமசக்திப்பிரபோதனமாம். பின்னையும் கீழேநடப்பித்தால் (அபானத்திலே மூட்டி) மூலசக்தி நிகுஞ்சனமாகும்.

39. ஆகையாலிந்தப்பிரகாரம் ஊர்த்துவ சக்தி, மத்தியமசக்தி, அதோசக்தி இந்த மூன்றையும் கிரமமாக நிபாதனமும் பிரபோதனமும் ஆகுஞ்சனமும் பண்ணின யோகீசுவரர்கள் பரமகதியை யடைவர்கள்.

40. ஆகையாலே நீயும் மகாச்சரியமாக சந்திரசூர்யாக்நி மண்டலங்களிலே (இந்தமூன்று சக்தி லக்ஷணங்களை யறிந்து) பிரணவத்துவனியோடு கூட வாயுவை சந்தானம் செய்வாயாக.

41. மூன்று வேதங்களும், மும்மூர்த்திகளும், மூன்று லோகங்களும், முக்குணங்களும் இவை யெல்லாம் பரபிரஹ்ம ஸ்வரூபமான ஏகாக்ஷர மென்னும் பிரணவ மந்திரத்திலிருக்கின்றன. இதுநிச்சயம்.

[†] இந்த அடையாள முள்ளது மூலத்தின் பொருள் விளங்கச் சேர்க்கப்பட்டது. கர்மணே, யென்பதற்கு (ஷட்) கர்ம சித்தியின் பொருட்டு என்னும் அர்த்தம் செய்யலாம். இது ஹடயோக சித்தி. ஷட்கர்ம சித்திகளாவன:—(1) தௌதி (துணியினால்), (2) பஸ்தி (ஜலத்தினால்), (3) நேதி (நூலினால்), (4) தாடகம் (கண்ணினால்), (5) நௌலிகம் (வயிற்றினால்), (6) கபால[illegible] (வாயுவினால் கபசோதனம் செய்து ஹடயோக சித்தி [illegible]மேலே மூன்றாவது சுலோகம் பார்க்க.

(வி. சி. ப.)

42. இவ்விதம் இந்தக் கேவலகும்பகப் பிரகாரத்தை சகல சித்தபுருஷர்களு மறிவார்கள். இந்த கேவலகும்பக மானது சர்வதந்திரங்களிலும் சிரோஷ்டமானது: மகாச்சரியமா யிருக்கும்.

43. யாதாமொருவன் தேகத்தில் நடக்கின்ற பிராணவாயுவினுடைய போக்குவரத்துக் களினுடைய நீதியை அறிந்து அதற்குத் தக்க விதானத்தால் வாயுவை ஸ்தம்பனம் பண்ணுவானே அவனுக்கு வாயுதாரணை சித்திக்கும்; சரீரசித்திய முண்டாகும்.

44. சித்தபுருஷர்களா லொப்புக்கொள்ளப்பட்ட சாஸ்திரங்களிலே கேவலகும்பகத்தின் லக்ஷணம் சொல்லப்பட் டிருக்கின்றது. ஆகிலும் மிகரகசியமா யிருக்கிறபடியால் அவிவேகி களுக்குத் தெரியமாட்டாது.

45. குருகடாக்ஷத்தால் கேவலகும்பகாப்பியாசம் சித்தித்ததே யானால், முத்திரா கரண பந்தனங்களால் ஓர் பிரயோசனமுமில்லை.

46. கேவல கும்பகத்தினாலே பிராண வாயு நாதத்துடன் விஷ்ணு பதத்தை யடைந்து (லயித்தால்) அப்பொழுது ஜீவாத்ம பரமாத்ம ஐக்கிய முண்டாகும்.

47. நிச்சப்தமாய் (நாதமற்றதாய்) நின்றதே தத்துவ மென்றும் அநிர்வாச்ய மென்றும் (புகலொணாத தென்றும்) பரமபத மென்றும் சொல்லப்படும். அதுவே பூதேந்திரியாத்மகமான பிரகிருதிக்கும், சகலதத்துவங்களுக்கும் லயஸ்தான மென் றறியவேண்டியது.

48. மூலபந்தனம், ஒட்டியாண பந்தனம், ஜாலந்திரபந்தனம் என்னும் பந்தனத் திரயங்களையு மப்பியாசம் பண்ணின யோகீசுவரனுக்கு அந்த அப்பியாசத்தினால் ஊர்த்துவமான பிராணவாயு ஆகாசத்தில் நின்றால் அதனால் பூதங்களும், இந்திரியங்களும், இந்திரிய விஷயங்களும், மனம் சித்தம் அகங்காரம் முதலிய அந்தக்கரணங்களும் இது முதலிய சமஸ்தமும் லயமடையும். அப்பொழுது விருத்திரகிதமான(மனோ விருத்திகளற்ற) சுகமுண்டாகு மென்று சொல்லப்படும்.

49. (அந்த பந்தத் திரயங்க ளென்னவென்றால்): யாதொன்றானது வாயு நிரோதனத்தால் அபானனென்கிற சூர்யனைப்பிராணனென்கிற சந்திரனோடே கூட்டி மேற்செல்லும்படியாகச்செய்து சமஸ்தயோக சித்திகளையுமடையப் பண்ணுமோ அதுவே மூலபந்தனமென்று யோகீசுவரர்களால் சொல்லப்படும்.

50. நாபிக்குக்கீழ் அபானனும் நாபிக்கு மேல் பிராணனுமாக நிறுத்தி (அறிவின் பலத்தினாலே) பந்தனம் பண்ணுவது ஒட்டியாண பந்தனமென்றுசொல்லப்படும்.இப்பந்தமானது சகலரோகங்களையும் ஜனன மரணங்களையும் மிருத்தியுவையும் போக்குவிக்கும்.

51. கழுத்தை வளைத்துக் கொண்டு ஹ்ருதயத்திலேசிபுகத்தை(முகவாய்க்கட்டை) திடமாகப் பொருந்தச் செய்தலே ஜாலந்தரபந்தனமென்று சொல்லப்படும். இது ஊர்த்துவத்திலிருக்கும் (மேலிருக்கும்) அமிர்தத்தையிறங்கச்செய்யும்.

52. இப்படி (பந்தனங்கள் மூன்றையு மப்பியசித்து) ஊர்த்துவ மத்திம பந்தனங்களினாலேயும், அபான வாயுவினுடைய ஆகுஞ்சனத்தினாலேயும் ஓர் நாசிகா துவாரத்தில் சகல வாயுக்களும் உட்பிரவேசிக்கும். அதினால் சிக்கிரத்தில் கேவலகும்பகசித்தி யுண்டாகும்.

53. இக்கேவல கும்பக மானது எவனுக்கு சதாகாலமும் வசமாகுமோ அவன் மகா பிரசித்தனான பிராணசம்யமி யென்று சொல்படுவான்.

54. இந்தப்பிரகாரம் பிராணாயாமவிதானத்தை மூன்றுமாதம் தப்பாமல் அப்பியாசம் பண்ணினயோகீசுவரனுக்கு தேக லகுத்துவமும், அக்நிதீபனமும் சமஸ்தநாடி சுத்தியும், நாதசிரவணமுமுண்டாகும்.

55. ஆகாசத்தில் பிராணன் (லயம்) அடைந்தால் அந்த க்ஷணமே உன்மனி ஆகும். அந்த உன்மனீ அடையப்பெறுகிற வரைக்கும் விவேகியானவன் இக்கேவல கும்பகாப்பியாசத்தை விடாமலனுஷ்டிக்க வேண்டும்.

56. (அப்பியாசப்பிரகாரமென்ன வென்றால்):முன்னால் பிரஹ்மஜ்ஞானியாகிய குருவை நமஸ்காரம் பண்ணி அந்தரங்கத்தி லிருக்கும் காமக் குரோதாதிகளாகிய சத்துருக்க ளாறு வரையும் ஜெயித்து, ஏகாந்தமாய் சுத்தமான ஸ்தலத்திலே யிருந்து கொண்டு புருவ மத்தியமாகிற பத்மத்தில் பரசிவத்தைத் தியானம் பண்ணவேண்டும்.

57. (இவ்விதம் தியாநம்பண்ணி) [நாதானுசந்தானத்தால், அதாவது] சதாகாலமும் அநாஹத திவ்யநாதத்தைக்கேட்டு விபின்னமாய் நிர்மலமான பிந்து ரத்னத்தைத் தரித்து சந்திரமண்டலத்தி லிருந்துவரும் அமிர்தத்தையுண்டு, சங்கல்ப விகல்பக் கூட்டங்களை யறுத்து,—

58. திரிகூடஸ்தானத்தில் வாயுவை திடமாக நிறுத்தி, அவ்வாயுவை மனதுடன்கூட திரிகோண ரூபமான சுஷும்னநாடி மார்க்கத்திற் பிரவேசிக்கச் செய்து அப்பொழுது ஊர்த்துவ சூக்ஷ்ம குண்டலினியைப் பேதித்து விஷ்ணுபதத்திலே யடையப்பண்ணி சுகத்தை யனுபவிப்பாயாக.

59. இப்படிப்பட்ட விஷ்ணுபதஸ்வரூபமானதும் சர்வவியாபகமானதும் சதாகாலமும் பாவிக்கப்பட்ட விஷ்ணு ரூபமானதும் கேவல கும்பகாப்பியாசத்தால் சித்தியானது மாகிய சிவத்தை பிராணயாம ஜலத்தால் அபிஷேகம் பண்ணிப்பூஜிப்பாயாக.

இங்ஙனம்
சதாசிவ யோகீந்திரரால்
செய்யப்பட்ட
சிவயோக தீபிகை யென்கிற கிரந்தத்தில்
பாஹிய சதுரங்க பூஜாவிதான மென்னும்
இரண்டாம் படலம் முற்றும்.

---

## *Sita—A Tale of Hindu Domestic Life.*

## சீதா, அல்லது இல்லறவாழ்க்கை.

### 29 - வது அதிகாரம்.

ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் என்னமறைத்தும் சமாசாரம் வெளியில்வந்துவிட்டது. ஏஜண்டு வேம்பய்யருக்குக் கோபம் உண்டானபடியால் தன்னிடத்தில் சமாசாரம் சொல்லவில்லை, இரகசியமாய் பேசினார்களென்று இராமச்சந்திரய்யர் காதில் படும்படி இந்த சங்கதிகளை யெல்லாம் பட்டணத்திற்குச் சொல்லி அனுப்பிவிட்டார். உடனே இராமச்சந்திர அய்யர் ஸ்ரீநிவாசசாஸ்திரிகளுக்கு சமாசாரம் என்னவென்று கடிதமூலமாய்க் கேட்டார். அதற்கு ஸ்ரீநிவாசஸாஸ்திரிகள் பதிலே எழுதவில்லை, பிறகு இராமச்சந்திரய்யருக்குக் கோபம் பிறந்து நேரில்போய்க் கேட்பதென்று வந்தார். ஸ்ரீநிவாசசாஸ்திரிகள் அப்போதும் அவரைக்கவனியாமல் சொத்து ஒன்றையும் அவரிடம் ஒப்புவிக்க முடியாது, வேண்டுமானால் வியாஜ்ஜியம் செய்து பெற்றுக்கொள்ளலா மென்று சொன்னார். இராமச்சந்திரய்யருக்குக் கிழவனிடம் கொடுக்கப்பட்டகடிதத்தின் சமாசரம் விசாரிக்க நன்றாய்த் தெரிந்தது. உடனே இராமச்சந்திரய்யர் தங்கத்தின் மீது வியாஜ்ஜியம் போட்டு கிழவன் இருப்பிடத்தைச் சோதனை செய்து தஸ்தாவேஜியை எடுக்க வேண்டுமென்று கோர்ட்டு மூலமாய்க் கேட்டார். அப்படியே உத்தரவாகி சர்க்காரில் கிழவன் வீட்டைச்சோதனை போட்டு கடிதத்தைக் கைப்பற்றிக் கொண்டார்கள். இதற்குள் தங்கம் தனக்கு வரப்போகிற தீங்கை நினைக்காமல் தன்தாயாரைப் பார்க்கவேண்டுமென்று ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளைத் தூண்டிவிட்டாள். அவர் அப்படியே ஊர்ஊராய் விசாரித்துப் பார்க்கக் கடைசியில் பீமபுரத்தில் ஒரு வீட்டில் அவளிருக்கக் கண்டார்கள். அங்கே போகவும் அந்தக்கிழவி அம்மாள் இவர்களைக் காணவும் நடுங்கினாள். தங்கம் அவளுக்குச் சமாதானத்தைச்சொல்லி கடிதம் வந்ததா என்று கேட்டாள். அவள் கடிதம்என்ற பேச்சை கேட்கவும் நடுங்கி அய்யோ அதை எடுத்துவிட்டீர்களோ! என்றாள்! ஸ்ரீநிவாச சாஸ்திரிகள் தங்கத்தை அடக்கி அம்மா நாங்கள் கடிதம் ஒன்றையும் அறியோம். கிழவரை அந்தக்கடிதம் இருந்தால் சோதித்து எடுத்துக் கொள்ளும்படி சொல்லிவிட்டோம். ஆனால் எங்களுக்கு ஓர் யோகி மூலமாய் எல்லா சமாசாரங்களும் தெரிந்துவிட்டது. உங்கள்மீது தப்பிதம் ஒன்

றும் இல்லையே; நீங்கள் என் வருத்தப்படவேண்டும். நானும் உங்களையும் மன்னித்து இப்போதும் தங்கத்தை சேஷய்யர் பெண்போலவே பாவித்துத் தான் நடத்தி வருகிறேன். நீங்கள் அதுவிஷயத்தில் ஒரு கவலையும் வைக்கவேண்டாமென்றார். அந்தம்மாள் அய்யா எனக்கு அவ்வளவு தான்வேண்டியது. நான் என்ன செய்வேன்! என்யஜமானி அப்படிக் கட்டாயப்படுத்திவிட்டாள்! இது தெரிந்தால் வெகு கஷ்டமெல்லாம் வருமென்று நான் தான் அக்கடிதத்தை ஒருவருக்கும் காண்பிக்கக்கூடாதென்று இருந்தேன். உங்களுக்கு சங்கதி தெரிந்துவிட்டது! இனி நீங்கள் கடிதத்தைப் பார்த்தபோதிலும் பாதகமில்லையென்றாள். உடனே ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் அம்மா நாங்கள் கடிதத்தைப் பார்த்துவிட்டோம்! ஆனால் அது உங்களுக்குத் தெரிந்தால் வருத்தம் உண்டாகும்;உங்கள் மனவியாதியும் அதிகமாகுமென்று சொல்லவில்லையென்றார். இப்படிக் கவர்கள் பெசிக்கொண்டிருக்கும் போதே கிழவர்வந்து சேர்ந்தார். வந்தனும் எல்லோரும் அவரையுபசரித்தார்கள். கிழவிஅம்மாள் தான் எல்லாவற்றையும் கேட்டதாகவும் நிரம்ப சந்தோஷமாச்சுதென்றும் இனி கடிதத்தை அவர்களிடம் காண்பிக்கலாமென்றும் சொன்னாள். கிழவன் சற்று பேசியிருந்துவிட்டு பிறகு ஸ்ரீநிவாச சாஸ்திரிகளைத் தனியாகக் கூப்பிட்டு தன்வீட்டிலே சோதனை போட்டுக்|கடிதத்தைக்கொண்டுபோய் விட்டார்களே என்றான். ஸ்ரீநிவாச சாஸ்திரிகளுக்கு வெகுவருத்தமுண்டாகிவிட்டது. அவர் என்னசெய்வார்! உடனே அவர் தங்கத்திடம் சொல்ல எல்லோரும் கவலைப்பட்டுக்கொண்டிருந்தார்கள். ஆனால் இதுகளையெல்லாம் கிழவியம்மாளுக்குத தெரிவிக்வேண்டுமென்று தீர்மானித்து, அவளையும் கிழவனையும் தாங்களே காப்பாற்றுகிறதென்று கூட்டிப்போனார்கள். இராமச் சந்திரய்யருக்கு அநியாயமாய் நிலங்களைக் கட்டிக்கோள்வதற்குப் பிரியமில்லை. பேருக்கு வாங்கிக்கொண்டு அதை தங்கத்துக்கே தானமாகக் கொடுப்பதாக உத்தேசித்துஇருந்தார். தங்கம் கெட்டஎண்ணமாக நடப்பதைக் கண்டுதான் அவர் வியாஜ்ஜியம் போட ஆரம்பித்தார். இராமச்சந்திரய்யர் வியாஜ்ஜியத்தில் சேஷய்யர் காலத்தில்நடந்த மோசமெல்லாவற்றையும் ஏஜண்டுவேம்பய்யரைக்கொண்டே ருசுப்படுத்திக் கிழவனையும் ஸம்மன் செய்து அவர்கள் இருவரையும் ஜானகியம்மாள் கடிதத்தையும் வைத்துக் கொண்டே கேஸை ருசுப்படுத்தி விட்டார். வேம்பய்யர்மீது இராமச்சந்திரய்யருக்கு சமாசாரம் கொடுத்ததாக சந்தேகமிருந்தபடியால் அவரை ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் பண்ணையை விட்டுத் தள்ளிவிட்டார். பண்ணைகாரியஸ்தர்களைத் திடீரென்று யோஜிக்காமற்றள்ளுகின்றது பிசகென்று ஸ்ரீநிவாசசாஸ்திரிகள் நினைக்கவேயில்லை. தள்ளினதும் அவர் இராமச்சந்திரன் பக்ஷம் சாக்ஷிக்குவந்து விட்டார். இராமச் சந்திரய்யருக்கு வியாஜ்ஜியம் ஜெயித்துவிட்டது. இராமச்சந்திரய்யர் வியாஜ்ஜியம்முடிந்ததும்பட்டணம் புறப்பட்டுப்போய்விட்டார். தங்களுக்கு வியாஜ்ஜியம் தோர்த்துப் போனதில் வெகு வருத்தம். தன் கோபங்களை யெல்லாம் இராமச்சந்திரய்யர் மீது செலுத்த ஆரம்பித்தாள். இராமச்சந்திரய்யருக்கு ஏதாவது கெடுதலை கூடிய சீக்கிரத்தில் செய்ய வேண்டுமென்று தீர்மானித்தாள். வியாஜ்ஜியம் தோற்றுப்போன முதல் ஸ்ரீநிவாஸசாஸ்திரிகள் தங்கத்தை லட்சியம்செய்கிறதில்லை. அவளுடன் பேசுவதைக்கூட விட்டுவிட்டார். தங்கத்துக்கு இதைப் பார்க்கப்பார்க்க வருத்தமதிகரித்தது. அதனால் இவரிடம் அவளும் நெருங்குகிறதில்லை. தங்கத்துக்கு இராமச்சந்திரனுக்குக் கெடுதல் செய்வதைப்பற்றி யோஜனைசெய்ய வெங்கடராமசாஸ்திரிகள் குமாரன் முத்துசாமி அகப்பட்டான்: அவனும் வெங்கடராமசாஸ்திரிகளைப்போலவே வாய்ப்பேச்சில் வெகு நைச்சியமுள்ளவன்.

ஆனால் அவன் எண்ணம்மட்டும் நிரம்பவும்கெட்டது. கெட்ட எண்ணமே குடிகொண்டிருக்கும் தங்கம் அவனை அடிக்கடி வீட்டிற்கு அழைத்து இரகசியம் பேசிக்கொண்டிருப்பாள். ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளுக்கு அவன் அடிக்கடி வருவதையும் தங்கம் அவனுடன் வெகு சரஸமாய்ப் பேசுவதையும் தன்னிடம் அதிகமாக வராமல் இருந்ததிலும் தங்கம் முத்துசாமியை வைத்துக்கொண்டிருக்கிறாளென்று சந்தேகிக்க ஆரம்பித்தார். ஆனால் தங்கத்தினிடத்தில் அப்படிப்பட்ட எண்ணம் இல்லை. ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் தன்னை அலட்சியம்செய்வதை நினைத்து நினைத்தே தங்கம் உருகினார். சொத்துப்போனதில் அவளுக்குப் பாதி உயிர்போய்விட்டது. தங்கம் வரவர உலகவாழ்க்கையையே வெறுக்க ஆரம்பித்தாள். ஒருநாள் ஸ்ரீநிவாஸசாஸ்திரிகள் வெளியேபோயிருந்தார். அவர் வெளியேபோய்விட்டுத் திரும்பிவரும்போது தபால்காரன் அவரிடம் ஒருகடிதத்தைக் கொண்டுவந்து கொடுத்தான். அவர் அதைப் படித்துப்பார்க்க இராமச்சந்திரன் சேஷய்யர் சொத்து தனக்குத்தீர்ப்

பாகி இருந்தபோதிலும் தனக்கு வேண்டாமென்றும் வியாஜ்ஜிய செலவுபோக மீதியில் பாதியை தர்மத்துக்கு எழுதிவைத்து விடுவதாகவும் பாதியை தங்கத்துக்கே கொடுத்துவிடுவதாகவும் தன்னைவியாஜ்ஜியத்துக்கு விடாமல் முந்தியே சொத்தைக்கேட்டபோது கொடுத்திருந்தால் பூராசொத்தையும் தங்கத்துக்கே விட்டிருப்பே னென்றும் எழுதியிருந்தான். ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளுக்கு இதைப்பார்க்க வெகுசந்தோஷமுண்டானது. அவர் தன்குடும்பசொத்தைக் கூட நம்பாமல் இதைத்தான் நம்பி இருந்தார். பாதியாவது வருகிறதேயென்று சந்தோஷப்பட்டு இந்த சந்தோஷ சமாசாரத்தை தங்கத்திற்குச் சொல்லும் பொருட்டு வெகு வேகமாய் வீட்டுக்குள் போனார். வீட்டில்போகவும் தங்கத்தைக்காணோம். எங்கே தேடிப்பார்த்தும் அவள் அகப்படவில்லை. நகைகள்வைக்கும் அறையில் ஒருவேளை இருப்பாளென்று அங்கே வந்தார். அந்தக் கதவுகள் போடப்பட் டிருந்தன. ஸ்ரீநிவாசசாஸ்திரிகள் கதவையிடித்தார். கதவு திறக்கப்படவில்லை. வெகுநேரம் இருந்து பார்த்தார். கதவு திறக்கப்படவில்லை ஸ்ரீநிவாச சாஸ்திரிகள் ஏதோசந்தேகித்து இரண்டு ஆள்களைக் கூப்பிட்டு கதவைப்பெயர்த்துவைக்கச் சொன்னார். கதவைப்பெயர்த்துவைக்கவும் ஸ்ரீநிவாஸசாஸ்திரிகள் உள்ளேபோய்ப்பார்க்க அங்கே தங்கம் கழுத்தில் சுருக்குப்போட்டுக் கொண்டிறந்துபோய்ச் செத்தபிணமாகத் தொங்கிக் கொண்டிருந்தாள். ஸ்ரீநிவாஸசாஸ்திரிகளுக்கு இந்த கோரமானகாட்சியைப்பார்த்துச் சகிக்கக்கூடவில்லை. இதற்குள் கூட்டம் கூடிவிட்டது. ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் புரண்டு புரண்டு அழுதார். இதற்குள் அங்கே கிடந்த கடிதத்தை ஒருவர் எடுத்தார். அதில் ஸ்ரீநிவாஸசாஸ்திரிகளுக்கென்று எழுதியிருந்தது. ஸ்ரீநிவாவிசாஸ்திரிகள் அதை எடுத்துப்படித்துப்பார்த்தார். அதில் அடியில் வருமாறு எழுதியிருந்தது.

"என் இஷ்டமுள்ள பிராணநாதருக்கு நமஸ்காரம். தாங்கள் என்னைவெறுக்க நான் என்ன தப்பிதம் செய்தேனோ தெரியவில்லை. தெய்வச்செயலாய் நேர்ந்தது! எனக்கு சொத்தில்லாமல் போன தப்பிதத்தைத் தவிர வேறு ஒரு தப்பிதத்தையும் நான் அறியேன். ஆனால் தானொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைக்குமென்று நான் முத்துசாமியோடு அடிக்கடி இராமச்சந்திரனுக்குக் கெடுதல் செய்யயோஜித்த பாவமானது தாங்கள் என்னை வெறுக்கச்செய்தது. நான் இப்படித்தங்கள் பிரியத்தையும் இழந்து சொத்தையும் இழந்து உயிர்வைத்திருப்பதைவிட பிராணனை விட்டுவிடுவதே நலமென்று யோசித்து விட்டேன். ஆகையால் என்னைப் பற்றி ஒருவரும் விசாரப்படவேண்டாம். இராமச்சந்திரன் என்மீது ஒரு தப்பிதமும் கெடுதல்செய்யவும் எண்ணவில்லை. அப்படியிருக்க அவனுக்குக் கெடுதல்செய்தது பிசகுஎன்பதற்காகவே கடவுள் என்னை இப்படி தெண்டிக்கிறார். அருமையைப் படுவதற்கும் பிறருக்கு தீங்கு நினைத்ததற்கும் பிரயோஜனம் இது தான். அதை நான் அனுபவிக்கிறேன். இனி என்னைப்பார்த்து எல்லோரும் நல்ல மார்க்கத்தில் நடக்கட்டும்.

தங்கம்.''

என்று எழுதியிருந்தது. ஸ்ரீநிவாச சாஸ்திரிகள் அய்யோ! நான் அவர்களைவீணில் சந்தேகித்தேனே! அவள்மீது ஒருபிசகும் இல்லையே! அய்யோஎன்பிரியம் குறைந்ததென்றல்லவா அவள் உயிரையேமாய்த்துக் கொண்டாள். நானும் அவள்போலவே உயிரை விட்டு விடுகிறேனென்று கயிற்றையெடுத்துக் கட்டிக்கொள்ளப்போனார். சுற்றியிருந்தவர்கள் நல்ல வார்த்தை சொல்லி அவரைத்தேற்றினார்கள். ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் மறுபடியும் அய்யோ இராமச்சந்திரன் கிரமமா பாதி சொத்துகொடுப்பதாக எழுதியிருக்கிறதைக்கேட்டால்கூட எவ்வளவோ சந்தோஷப்படுவாளே! இந்தக்கடிதம் நேற்றையதினமாவதுவந்ததா. எனக்கு இனி யார் இப்படி என் குடும்பத்தை பொறுப்பாகப் பார்க்கப்போகிறார்கள்! என் கோபத்தினால் அவள் பயந்து பக்கத்தில்வராமல் இருக்க அதைக்கூட நான் அவளுக்கு முத்துசாமிசினேகிதத்தால் நமதுமீதுபிரியமில்லை யென்று சந்தேகித்தேனே? அய்யோ இனி இவளைப்போல் பிரியமுள்ளவர்கள் ஒருவரும் இல்லையே! என்றுசொல்லி ஒவ்வொரு சமாசாரங்களையும் சொல்லிச்சொல்லி அழுதார். கிழவியம்மாள் கிழவன் எல்லாரும் அதேமாதிரி அழுதார்கள். தங்கம் இறந்த சமாசாரம் உடனே தந்திமூலியமாக வேங்கலக்ஷிமி அம்மாள், சீதாராமன், இராமச்சந்திரய்யர் எல்லோருக்கும் சொல்லியனுப்பப்பட்டது. அவர்களெல்லாரும் வரவேண்டுமென்று பிணத்தைக்கூடகிறுத்த ஏற்பாடு செய்தார்கள். சிலர்அதுகூடாது போலீசார்வந்துவிடுவார்கள்; உடனே எடுக்கவேண்டும்என்றார்கள். ஸ்ரீநிவாசசாஸ்திரிகள் போலீசார் என்கிறபேச்சை கேட்கும்போதேநடுங்கினார். உடனேஎல்லோரும்சேர்ந்து பிணத்தை எடுத்துவிடவேண்டுமென்று தீர்மானித்தார்கள். ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகளுக்கு சம்மதமில்

லாமலிருந்தபோதிலும் போலீஸ்பயத்தினாலும் இருக்கிறவர்கள் தொந்தரவினாலும் அப்படியேசெய்ய சம்மதித்தார். பாதிஜாமம்கொண்டுபோனதும் போலீசார்வந்து மறித்துக்கொண்டார்கள். பிணத்தைக்கொண்டுபோனவர்கள் எடுத்தபிணத்தை வீட்டுக்குக்கொண்டுவரக் கூடாதென்கிற சாஸ்திரத்தால் அதை அங்கேயே வைத்தார்கள். போலீசார் சோதனைச்செய்துபார்த்து டாக்டர் வரவேண்டுமென்றார்கள். டாக்டருக்குத் தந்தி கொடுக்கப்பட்டு அவரும்சற்று நேரத்திற் கெல்லாம் வந்து சேர்ந்தார். டாக்டர் பிரேதத்தைப்பார்த்து பரிசோதித்து தற்கொலையாய்ப் பிராணன் போனதென்றும் மூச்சுபிடித்துக்கொண்டு கழுத்தில் சுருக்கிட்டுக்கொண்டதால் மரணமென்றும் ரிபோர்டுசெய்தார். போலீசாரும் அங்கிருந்த சிலரிடத்தில் வாக்குமூலம் வாங்கிக்கொண்டு ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளிடமும் வாக்கு மூலம் வாங்கிக்கொண்டு புறப்பட்டுபோய் விட்டார்கள். ஜனங்களெல்லாம் சேர்ந்துகொண்டு கார்த்தது கார்த்தோம் இராமச்சந்திரய்யர் காமேசுவரய்யர் வெங்கலட்சுமி அம்மாள்எல்லோரும் வருகிறவரையில்கார்க்கிறதென்றுபிணத்தை அப்படியே போட்டுவைத்தார்கள். அன்றைக்கு அந்தஊரில் இருந்தவர்களெல்லாம் பிணம் கிடக்கிறது வீட்டில் சாப்பிடலாகாதென்று வாய்க்கால் கரைக்கு சாதம்கொண்டுபோய்ச் சாட்டார்கள். அந்த ஒரு ராத்திரிதான் பட்டினி இருந்துவிட்டால் இறந்துபோய் விடுவார்களா ! அந்தப் பிணமும் அப்படியே சுகப்பட்டதுதானே. இப்போது எப்படியிருக்கிறது. அதைச்சேர்ந்த மனிதர்களாயிருந்தும் அந்த விசனத்தை யெல்லாம் மறந்து சாப்பிடும்படி பசிகூட ஞாபகத்துக்கு வருமா? மனித சுபாவமே இப்படித்தான். தன் காரியத்தைத் தான் பார்த்துக் கொள்வார்கள். அந்த வயிறுதான் கேட்கிறதா!

> 'ஒருநா ளுணவை ஒழியென்றால் ஒழியாய்
> இருநாளைக் கேலென்றா லேலாய் [வயிறே
> ஒருநாளு மென்னோவறியா இடும்பைகூ—ரென்
> உன்னோடு வாழ்த லரிது."

என்று சொன்னது அந்த ஜனங்களுக்குத்தான் சொன்னதுபோ லிருந்தது. மறுநாள் இராமச்சந்திரய்யர், காமேசுவரய்யர், வெங்கலட்சுமி அம்மாள் எல்லோரும் வந்து சேர்ந்தார்கள். காமேசுவரய்யர் தன் கஷ்டத்தை எல்லாம் மறந்து தங்கத்தின் கொடுமை யெல்லாம் மறந்து, அவள் மீது விழுந்து அழுதார். இராமச்சந்திரய்யர் அய்யோ தங்கம் நான் சொத்துமுழுவதும் உனக்கேகொடுத்து விடுவேனே நீயேதானே கெடுத்துக்கொண்டாய்! ஐயோ என் கடிதமாவது இரண்டு நாளைக்குள் வந்ததா! அதைப் பார்த்தால்கூட நீ இப்படி யோஜித் திருக்கமாட்டாயே! அய்யோ நான் பாவி உன்மீது வீணில் நான் என் வியாஜ்ஜியம் செய்தேன் என்று அழுதார். காமேசுவரய்யர் அவள் எனக்கு ஒரு ஒத்தாசையும் செய்யவேண்டாம்: அவள் ஒருவள் உயிரோடிருந்தால் போதுமே! என்று அழுதார். வெங்கலட்சுமி அம்மாளும் என் தங்கத்தைப் போல வீட்டில் யார் காரியம் செய்வார்கள்! அவள்புத்தி யாருக்குவரும்! என் அதிர்ஷ்டம் அவ்வளவுதானென்று சொல்லி அழுதாள். துக்கசமாசாரத்தை நாம் வர்ணிக்கவேண்டிய தில்லை. தங்கத்துக்கு யெல்லாம் கிரமம்போல் நடந்தது.

---

ஓம் ஸ்ரீசாவித்திரியை நமஃ

# உபநிஷதர்த்த தீபிகை.

## பிக்ஷுகோபநிஷத்.

ஓம்வருணாய ஹ ஹதிஸாக்ஷிஃ.

1. மோக்ஷத்தை யிச்சிப்பவர்களான பிக்ஷுக்கள் (சந்நியாசிகள்) குடீசன், பஹூதகன், ஹம்ஸன், பரமஹம்ஸன் என நான்கு விதமாவர்கள்.

2. குடீசககர்க ளென்பதாவது கௌதமர், பரத்வாஜர், யாஞ்யவல்கியர், வசிஷ்டர் முதலியவர்கள், எட்டுக்கவளங்கள் (அன்னத்தைச் சாப்பிடுவதாக) நியமமுள்ளவர்களாகி யோக மார்க்கத்தில் மோக்ஷத்தையே பிரார்த்தியா நிற்பர்.

3. பஹூதகர்களாவது திரிதண்டம், கமண்டலு, குடுமி, யஞ்ஞோபவீதம் (பூநூல்) காஷாயவஸ்திரம் இவைகளைத் தரித்துக்கொண்டு

பிரஹ்ம ரிஷிகளின் * வீட்டில் மதுமாம்சங்களை விலக்கி எட்டுக் கவளங்கள் பிக்ஷையெடுத்து யோகமார்க்கத்தில் மோக்ஷத்தையே பிரார்த்தியா நிற்பர்.

4. ஹம்சர்களாவது கிராமத்தில் ஓர் இராத்திரியும், நகரத்தில் ஐந்து இராத்திரியும், க்ஷேத்திரத்தில் ஏழு இராத்திரியும் (வசிப்பார்கள்). அதற்குமேல் வசிக்கக்கூடாது. கோவின் மூத்திரம் கோமயம் இவைகளை ஆகாரமாயுடையவர்களாகி சாந்திராயண (விரதத்தில்) ஊக்கமுடையவர்களாய் யோக மார்க்கத்தில் மோக்ஷத்தையே பிரார்த்தியா நிற்பர்.

5. பரமஹம்சர்களாவது, சம்வர்த்தகர், அருணி, சுவேதகேது, ஜடபரதர், தத்தாத்ரேயர், சுகர், வாமதேவர், ஹாரீதகர் முதலானவர்கள் எட்டுக் கவளம் நியமம் வைத்துக்கொண்டு யோகமார்க்கத்தில் மோக்ஷத்தைப் பிரார்த்தியா நிற்பர். மரத்தி னடியிலாவது, பாழும் வீட்டிலாவது (இருப்பர்). ஸ்மசானத்திலாவது வசிப்பர். வஸ்திரமுடையா யாவது திகம்பரராகவாவது (வஸ்திர மில்லாமலாவது) இருப்பர். அவர்களுக்கு தர்மம் அதர்மம், லாபம் லாபமின்மை, சுத்தம் அசுத்தம் என்பன இல்லை. த்வைத மற்றவராய், மண், கல் தங்கம் இவைகளையும் சமமாய்ப் பார்ப்பவராய் எல்லா வர்ணத்திலும் (ஜாதியிலும்) பிக்ஷையெடுப்போராய் எங்கும் ஆத்மாவே யென்று பார்ப்பர். * பிறந்த மேனியாய் த்வந்த்வமற்றவர்களாய், ஒன்றையும் வாங்காதவராய், சுக்லத்தியானத்தில் ஊக்கமுள்ளவராய், ஆத்ம நிஷ்டர்களாய், பிராண சம்ரக்ஷணையின்பொருட்டு (மாத்திரம்) சொல்லிய காலத்தில் பிக்ஷையெடுப்போராய், பாழும்வீடு, தேவாலயம், புல்புதர், கரையான் புத்து, மாத்தடி, குயவன் பட்டரை, அக்கினி ஹோத்திர சாலை, ஆற்றங்கரை † மலைக்குகை, மரப்பொந்து, மலையருவி, ஸ்தண்டிலம் ‡ இந்த இடங்களில் (இருந்துகொண்டு) பிரஹ்ம மார்க்கத்தில் நன்றாய் முதிர்ந்தவர்களாய், சுத்த மனதுடையராய் பரமஹம்ஸாசாரமாகிய சன்னியாசத்தால் தேகத்தை விடுவார். அவர்களே பரமஹம்ஸர்கள்.



* பிராஹ்மணர்கள் ரிஷிகள் இவர்களுடைய வீடுகளில் என்று பொருள் சொல்லவேண்டும்.

† சாந்திராயண மென்பது ஓர் விரதம். இதில் பௌர்ணமியில் பதினைந்து கவளம் அன்னம் சாப்பிட்டு பிறகு நாளைக்கு ஓர் கவளமாகக் குறைத்து அமாவாசையில் ஒன்றும் சாப்பிடாமலிருந்து மறுபடியும் நாளைக்கோர் கவளம் ஜாஸ்தியாக்கிப் பௌர்ணமியில் பதினைந்து கவளம் சாப்பிடுதல் நியமம்.

* பிறந்த ரூபத்தைத் தரிப்பவராய் என்பது மூலம். ['பிறந்த ரூபம்' என்பதற்குப் பொருள் தத்துவார்த்தமாய்க் கொள்ளல்வேண்டும். 'பிறப்பு' என்றால் கருவிலிருந்து பிண்டம் நழுவுவதையே வியவகாரத்தில் கொள்கிறார்கள். பாரமார்த்திகமாய்ப்பார்க்கில் "பரமாய சக்தியுட் பஞ்சமாபூதந், தாமாதிற் றோன்றும் பிறப்பு." என்று ஔவைகுறள் ஓதியதேயுண்மையென்பதை சாதகபுருஷர்கள் குருமுகமாய் ஐயந்திரிபற அறியவேண்டும். வி. சி. பர்.]

† புலிநம் என்பது மூலம். என்றால் ஆற்றினிடமுள்ள மணற்பாங்கான கரை அல்லது மணல்முட்டு.

‡ யாகத்திற்காக ஒழுங்கு படுத்திய பூமி.